# அடுக்குமொழி அகராதி

## (DICTIONARY OF ALLITERATIVE AND RHYTHMICAL PHRASES)



ஆசிரியர்

மு. சதாசிவம், எம்.ஏ.,

அணிந்துரை

திரு. மா. சண்முகசுப்பிரமணியம், பி.ஏ., பி.எல்.,

உதவிச் செயலாளர், சென்னைச் சட்டமன்றத் துறை.



விற்பனை உரிமை

**பாரி நிலையம்,**

**59, பிராட்வே, :: சென்னை-1.**

# அணிந்துரை



"பொழிந்தொழுகு முதுமறையின் சுவைகண்டும் புத்தமுதம்
வழிந்தொழுகுந் தீந்தமிழின் மழலைசெவி மடுத்தனையே,"

என்று, மதுரைச் சொக்கேசப் பெருமானைப் பாடுகின்றார் குமர குருபரர்.

தமிழ் என்றால் இனிமை; நம்மொழி சங்கத்தமிழ், அதோடு சந்தத் தமிழ்!

யாழின் இனிமையும், அமிழ்தின் சுவையும், அழகின் அழகும், மொழிக்கு வேண்டும் என்பதால்தான் போலும், 'யாழ்', 'அமிழ் தம்', 'அழகு' என்ற சொற்களில் உள்ள 'ழ' என்ற எழுத்து 'மொழி' என்ற சொல்லிலும் வருகிறது! அவ்வெழுத்து 'தமிழ்' என்ற சொல்லிற்குத் தனிச்சிறப்பை அளிக்கிறது!

ஒரு கருத்தைக் கண்ணுக்குணர்த்துவது உருவம், காதுக் குணர்த்துவது ஓசை. உருவம் அழகுபெற்றால் ஓவியம் ஆகிறது; ஓசை அழகு பெற்றால் இசையாக ஒலிக்கிறது. கண் ணிற்கு நல்லோவியமாய், காதுக்கு இன்னிசையாய், கருத்திற்கு இன்பமாய் உள்ளது கன்னித் தமிழ்மொழி. "அமிழ்தினைச் சுவை செய்தன்ன, அழகினுக்கழகு செய்தனர்," தமிழ்ப்புலவர்களும், கவிவாணர்களும். அந்த அமிழ்தன்ன தமிழ் நூல்களில் காணும் "அடுக்கு மொழிகளின்" தொகுப்பே யாகும் இந்நூல்.

சூலில்லா மேகத்தால், சுடர்முத்தில்லாச் சிப்பியினால், பொருளுணர்த்தாப் பாட்டிசையால் புண்ணியம் ஏதுமில்லை. அரியதொரு கருத்தில்லா அடுக்கு மொழிகளும் அங்கிலையில் உள்ளனவே. கருத்தை நன்குணர்த்திக் கவினோடு ஒலிப்பதுவே, செந்தமிழ் மொழியினது சந்தத்தின் நயமாகும்; இந்தச் சிறப்போடு இலங்குவது இந்நூலாம்.

“கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பு”, “உருவத்தால் இருவராகி உள்ளத்தால் ஒருவராதல்,” “அறிவுள் அறிவை அறியுமவரும் அறியவரிய பிரமம்”, “நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்”, “கிஞ்சுகவாய் அஞ்சுகம்”, “கனியினும் இனிய மென்மழலைக் குழவி”-இவைபோன்ற நன்முத்துக்களின் கோவை இந்நூல். அடுத்துவரும் பதிப்புக்களில் இத்தொகுப்பு இன்னும் விரிவடையுமென நம்புகிறேன்.

பட்டத்தைப் பெற்றவுடன் படிப்பனைத்தும் முடிந்ததென்று, இட்டப்படி வாழும் ஏனையோர் போலின்றி, கன்னித்தமிழ் மொழியைக் கவனத்துடன் ஆய்ந்து, அன்னையாம் அவளுக்கு ஆர்வமுடன் பணிசெய்யும், அன்பர் திரு. சதாசிவத்தின் அரிய முயற்சியை நாம், ஆதரித்துப் பாராட்டல் அனைவரின் கடனாகும்.

இன்னும் இதனைப்போல் எத்தனையோ நூல்கள் பல, எழுதி உலகினுக்கு ஈந்து இவர் பணிசெய்ய, “தமிழொடு பிறந்து பழ மதுரையில் வளர்ந்த” அங்கயற்கண்ணியம்மை அருள் என்றும் உளதாக.

சென்னை,
3—9—'64.

**மா. சண்முக சுப்பிரமணியம்.**

# முன்னுரை



'யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்குங் காணோம்' என்று கவியரசர் பாரதியார் பாடியுள்ளார். ஒவ்வொருவருக்கும் அவரவர் தாய்மொழி இனிமையாகத் தோன்றுவது இயல்பே. ஆனால் பிறமொழிகளுக்கில்லாத சில தனிச்சிறப்புக்கள் தமிழினுக்குண்டு என்பதை டாக்டர் கால்டுவெல், ஜி. யு. போப் முதலிய பல மேனாட்டறிஞர்கள் உணர்ந்து கூறிப் போந்துள்ளனர். தமிழின் தனிச்சிறப்புக் களுள் ஒன்று தமிழின் கவிதைப்பண்பு. இரண்டாயிரம் ஆண்டு களுக்கு மேலாகத் தமிழ்ப்பெருமக்கள் கவிதை வடிவிலேயே இலக்கியங்களை இயற்றி வந்துள்ளனர். சென்ற இரண்டு நூற் றாண்டுகளாக உரைநடை யிலக்கியம் வளர்ந்து வந்தபோதிலும் தமிழ்க் காப்பியங்களைப்போலப் பல்வளனும் ஒருங்கியன்ற மாண்மைபெற்ற உரைநடை நூல்கள் இன்னும் எழவில்லை என்றே சொல்லலாம். ஆங்கிலத்தில் உரைநடை நூல்கள் உயர்ந்த இலக்கியமாகப் போற்றிப் பயிலப்படுவதுபோலத் தமிழில் நவில்தொறும் புதுப்புது நூனயம் பயக்கும் நூல்கள் என்று எவையும் பயிலப்படுவதில்லை.

இலக்கிய மறுமலர்ச்சிக் காலமான இவ்விருபதாம் நூற்றாண் டில் உரைநடையில் கவிதைப் பண்பைப் புகுத்தும் முயற்சி நடைபெற்று வருகிறது. எதுகை மோனை நயங்கள் நிறைந்த அடுக்குமொழிகளை ஒல்லும்வாயெல்லாம் புகுத்தி உரைநடை யில் கவிதைச் சுவையை மிகுவிக்கப் பலர் முயன்று வருகின்ற னர். இத்தகையோருள் காலஞ்சென்ற டாக்டர் சேதுப்பிள்ளை மிகவுங் குறிப்பிடத்தக்கவர். அவரைப் பின்பற்றி இக்காலத்தில் திரு. அ. க. நவநீதகிருஷ்ணன் அவர்கள் அடுக்குமொழிகளைப் புகுத்திப் பல உரைநடை நூல்களை ஆக்கியிருக்கின்றனர்.

அண்மையில் உயர்திரு மா. சண்முகசுப்பிரமணியம், பி.ஏ., பி.எல்., அவர்கள் 'அண்ணல் நேருவின் அமுதமொழிகள்' என்ற தம் நூலைக் கவிதைச் சுவை நனிசொட்டச் சொட்ட இயற்றியுள்ளதைப் பல அறிஞர்கள் பாராட்டியிருக்கின்றனர்.

உரைநடையைக் காட்டிலும் பேச்சுக்களிலும் சொற்பொழிவுகளிலும் அடுக்குமொழிகள் மிகவும் வரவேற்கப்படுகின்றன. பதினைந்தாண்டுகளுக்கு முன்பு ஒருநாள் 'அடுக்குமொழியில் பேசுபவர் அண்ணாதுரை; அவர் பேச்சைக் கேட்கப் போவோம்' என்று கூறிக்கொண்டு எங்கள் ஊராகிய திருச்செங்கோட்டு மக்களும், அதன் சுற்றுவட்டாரத்திலுள்ள மக்களும் அவருடைய சொற்பொழிவைக் கேட்கப் பெருந்திரளாகக் கூடியதைக் கண்டேன். அடுக்குமொழிக்குத் தனியாற்றல் உண்டு என்பதை அவருடைய சொற்பொழிவைக் கேட்டு அன்றே உணர்ந்தேன். அண்மைக் காலங்களில் திருமதி சௌந்தரம் கைலாசம் அம்மையாரவர்கள் அடுக்குமொழிகள் நிறைந்த கவிதை நடையில் பல சொற்பொழிவுகள் ஆற்றியிருப்பதைக் கேட்டு ஆனந்தம் அடைந்திருக்கிறேன். அடுக்குமொழிகளை அள்ளிவீசிப் பேசுவதை ஒரு கலையாகக் கருதுகின்றனர் பலர். அடுக்குமொழியில் பேசுவது அழகு என்று எல்லாக் கட்சிச் சொற்பொழிவாளர்களும் உணர்ந்திருக்கின்றனர்; அடுக்குமொழிகளில் பேசப் பெருமுயற்சி செய்தும் வருகின்றனர்

உரைநடைக்கும் கவிதைக்கும் காந்தசக்தியையும் கவர்ச்சியையும் ஊட்டக்கூடிய அடுக்குமொழிகளைத் தொகுக்க வேண்டுமென்று சென்ற பல ஆண்டுகளாகவே முயன்று வந்தேன். அந்த முயற்சியின் பயனே இந்த அடுக்குமொழி அகராதி. தமிழிலக்கியத்தில் இஃது ஒரு புது முயற்சி. இந்த முயற்சி என் மெய்வருத்தக் கூலிதரும் என்றே நம்புகிறேன்.

தமிழில் வழங்கும் அடுக்குமொழிகள் எண்ணில்லாதவை. எனினும் நாலாயிரத்திற்கும் மேற்பட்ட அடுக்குமொழிகளை இங்கே தொகுத்துத் தந்துள்ளேன். இன்னும் சில ஆண்டுகள்

முயற்சி செய்தால் – தமிழில் வெளியாகியுள்ள எல்லா நூல்களை யும் படித்துப் பார்த்தால் – மேலும் ஓரிரு ஆயிர அடுக்குமொழி களைச் சேர்த்தல் ஒல்லும் என்ற துணிபு எனக்குண்டு.

தொடக்கத்தில் அடுக்குமொழிகள் எடுக்கப்பெற்ற நூல் களையோ, அடுக்குமொழிகள் பேசிய சொற்பொழிவாளரையோ குறிப்பிட வேண்டுமென்ற எண்ணம் இல்லாதிருந்தது. அதனால் பல அடுக்குமொழிகளுக்கு அவற்றின்மூலம் இந்நூலில் கொடுக்க முடியாது போயிற்று. மேலும் பெருவழக்கிலுள்ள, அதாவது பலரும் சாதாரணமாக வழங்கும் அடுக்குமொழிகளின் மூலங் களைக் குறிப்பிடுவது மிகவும் முடியாத காரியம். எனவே இன்றி யமையாத இடங்களில் மட்டும் பிறையடைப்பில் அடுக்கு மொழிக்குரிய நூல் அல்லது ஆசிரியரின் பெயர்கள் சுருக்க வடிவில் அல்லது முழுவடிவில் கொடுக்கப்பட்டுள்ளன. சுருக் கப் பெயர்களின் விளக்கம் இந்நூலி னிறுதியில் அருஞ்சொற் பொருளகர வரிசைக்குப் பின்னர்த் தரப்பட்டுள்ளன.

தலைசிறந்த எழுத்தாளர்கள், சொற்பொழிவாளர்கள் மட்டு மின்றிச் சாதாரணமானவர்களும் அடுக்குமொழிகளைப் புனைந்து எழுதுகின்றனர்; பேசுகின்றனர். எனவே அடுக்குமொழியில் எழுதுவதும் பேசுவதும் எல்லோர்க்கும் உரிய இன்பக்கலை யாகும். சிறப்பாக மாணவர்களுக்கும் சொற்பொழிவாளர்களுக் கும் இந்நூல் ஒரு வழிகாட்டியாய், வழித்துணையாய்த் திகழும் என்று நம்புகிறேன்.

இந்நூல் உருவாதற்கு உதவியாயிருந்த பெயர் குறிப்பிடப் பெற்ற, குறிப்பிடப்படாத எண்ணிலாத எழுத்தாளர்கட்கும், பல சொற்பொழிவாளர்களுக்கும் என் இதயங்கனிந்த நன்றி உரியது. இந்த நூலாகிய புதுமலரைத் தமிழன்னையின் திருவடித் தாமரையில் வைத்துப் படைப்பதில் மகிழ்ச்சியடைகின்றேன்.

இந்நூலுக்குக் கவிதைப் பண்பு கனிந்த அடுக்கு மொழி களில் அழகுமிக்கதொரு அணிந்துரை வழங்குவதற்கு அன்புடன் இசைந்த உயர்திரு மா. சண்முகசுப்பிரமணியம் அவர்கள் இன்

முகமும் இன்சொல்லும் அணியெனப் பூண்டவர்கள். கூரிய அறிவும் சீரிய சிந்தனையும் இயல்பாக அடுக்குமொழியில் எழுதும் பேராற்றலும், சட்டத்துறையில் நிபுணத்துவமும் வாய்ந்தவர்கள். சட்டவியல், தீங்கியல் சட்டம், குற்றமும் தண்டனையும் போன்ற அரிய சட்ட நூல்களைத் தமிழுலகுக்கு முதன் முதலாக வழங்கிய பெருந்தகையாளர். அவர்களுக்கு என் மனமுவந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்நூலைச் சுருங்கிய காலத்தில் அழகுற அச்சிட்டதோடு அச்சுப்படியினைப் படித்துத் திருத்தியும் உதவிய என் கெழுதகை நண்பரும், பழகுதற்கினிய பண்பினரும், பாரி அச்சக உரிமையாளருமான திரு. மு. நாராயணன் செட்டியாரவர்கட்கு என் பெருநன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்த நூலை விற்பனை உரிமையுடன் ஏற்றுக்கொண்டவரும், பாரி வள்ளலைப்போலப் பண்புள்ளங் கொண்டவரும், பாரி நிலைய உரிமையாளருமான திரு. க. அ. செல்லப்பா அவர்கட்குப் பெரிதுங் கடப்பாடுடையவனுவேன்.

என்னுடைய எண்ணத்திற்கும் செயலுக்கும் இன்துணையாயிருந்துவரும் என் குருவிற்கும், உலக முதல்வியாம் அன்னையாருக்கும் அவர்கள் திருவடி பணிந்து இந் நூலைக் காணிக்கையாகச் சமர்ப்பிக்கின்றேன்.

சென்னை
4—9—'64

மு. சதாசிவம்.

———

# அடுக்குமொழி அகராதி



அக்கக்காய் வெட்டுதல்—துண்டு துண்டாய் வெட்டுதல்
அக்கல்சுக்கலாகச் சிதறல்—அக்குச்சுக்காகச் சிதறல்
அக்கறையும் கவனமும் செலுத்துதல்
அக்கறையோடும் ஆர்வத்தோடும் செயலாற்றுதல்
அக்கிரமமாகவும் அநியாயமாகவும் செய்தல்
அக்கிரமமும் அநீதியும்
அக்கிலிப்பிக்கிலி—மனக்குழப்பம்
அக்கு அழுக்கு இல்லாத மனம்
அக்குத் தொக்கு இல்லாதவன் (அக்குத் தொக்கு - ஒட்டுப்பற்று)
அக்குமில்லை தொக்குமில்லை
அக்குவேறு ஆணிவேறாகப் பிய்த்தல், பிரித்தல்
அகங்குழைந்து ஆற்றாது அழுதல் (சிறு. 408)
அகடவிகடம் பேசுதல்
அகத்தும் புறத்தும் நிறைந்திருக்கும் ஆண்டவன்
அகந்தை அகங்காரம் இல்லாதவன்
அகந்தையும் அகம்பாவமும் உடையவன்
அகப்பற்று புறப்பற்றுக்களை அறவே ஒழித்தல்
அகமலர்ந்து அளவளாவுதல்
அகமலியுவகை ஆர்வமொடு (மலைபடு 184)
அகமும் புறமும் ஒத்திருத்தல்
அகமும் முகமும் மலர வரவேற்றல்
அகமும் முகமும் மலர்தல்

அகலாது அணுகாது தீக்காய்க (குறள் 61)
அகழ்ந்து தோண்டுதல்
அகன்று நீங்குதல்
அகாடி பிச்சாடி யில்லாதவன்—கட்டுக்கடங்காதவன்
அஃகி அகன்ற அறிவு (குறள் 175)
அங்கண்மாநிலத்து அமுதாகிய ஆறு (நைட - 7)
அங்கண் விசும்பின் ஆரிருள் அகற்றும் வெங்கதிர்ச் செல்வன் (புறம் - 59)
அங்கசங்கம்—பகட்டு; புணர்ச்சி
அங்கபங்கம்—உடம்புறுப்புக்களின் சோர்வு
அங்கம் ஆறுடை நான்மறை அந்தணர் (அ. திருப்பழ)
அங்கரங்க வைபோகங்களும்—சகல விதமான அனுபோகங்களும்
அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் நிற்கும் ஆண்டவன்
அச்சமும் அவலமும் கொள்ளுதல்
அச்சமும் திகிலும் அடைதல்
அச்சமுந் திகிலும் அதிரடியுங் கொண்டிருத்தல் (அதிரடி - மனக்கலக்கம்)
அச்சரி புச்சரியாயிருத்தல் — தொந்தரவாயிருத்தல்; தினவெடுத்தல்
அச்சுவேறு ஆணிவேறாகப் பிரித்தல்
அசட்டுப்பிசட்டென்று நடந்துகொள்ளல்; பயப்படல்; உளறுதல் (சந்திரிகா - 33)
அசட்டும் பிசட்டுமாக எழுதிவிடல்
அசடர்களும் தூர்த்தர்களும்
அசதியும் அயர்ச்சியும்
அசதியும் அயர்வும் அடைதல்
அசதி மறதியாய் விட்டு விடல்

அசையாமல் அலுங்காமல் இருத்தல்
அஞ்சலென்ற சொல்லும் அடையா நெடுங்கதவும்
அஞ்சாது எதிர்நிற்கும் ஆற்றல்
அஞ்சா நெஞ்சத்து ஆண்மையாளன்
அஞ்சா நெஞ்சம் படைத்த ஆண்மகன்
அஞ்சி அடிபணிதல்
அஞ்சி அலறி நடுங்கிடல்
அஞ்சி நடுநடுங்கி ஒடுங்குதல்
அஞ்சி நடுங்கிப் பதறுதல்
அஞ்சிப் பதறுதல்
அஞ்சிப் பதுங்கி ஒதுங்குதல்
அஞ்சிப் பயந்தவன் (பஞ்ச—வனவாசம்)
அஞ்சியஞ்சி ஆவி அழிதல்
அஞ்சி யடங்குதல்
அஞ்சி யடங்கிப் பணிதல்
அஞ்சிலே பிஞ்சிலே அறிந்து கொள்ளல்
அஞ்சிலே பிஞ்சிலே கொஞ்சுதல்—இளமைக் குழந்தையைக் கொஞ்சுதல்
அஞ்சிறை அறுகால் ஏழிசைப்பாடல் அளி (கூர்மபு. 20 - 25)
அஞ்சுபுலனும் அறிவுங் கலங்கல்
அஞ்சுவரும் வெஞ்சுரன் (கம்ப. 4–13–25) (அஞ்சு – அச்சம்)
அஞ்சொல் நுண் தேர்ச்சிப் புலவர் (புறம் 235)
அட்டக்கரியான ஆள்
அட்டக்கறுப்பாயிருக்கும் பொருள்
அட்டகாசங்களும் அட்டூழியங்களும்
அட்டகாசத்தை அடக்கி ஒடுக்குதல்

அடக்க ஒடுக்கம் இல்லாத அடங்காப்பிடாரி—(பழ)
அடக்கமும் அமைதியும் உடைய
அடக்கமே வடிவாய் அன்பே உருவாய் விளங்குதல்
அடக்கி ஒடுக்குதல்
அடக்குவாரற்ற கழுக்காணி
அடங்கி ஒடுங்கி இருத்தல்; நடத்தல்; கிடத்தல்
அடங்கி ஒடுங்கி நடுங்கிக் கிடத்தல்
அடங்கி முடங்கிக் கிடத்தல்
அடமும் பிடிமுரண்டும் உடையவள்— அப்பாத்.
அடமும் பிடிவாதமும் பிடித்தல்
அடலைமுடலை - (வீண் வார்த்தை) பேசுதல்
அடர்ந்து செழித்து வளர்ந்த
அடரடி படரடியாய்க் கிடத்தல்—குழப்பமாய்க் கிடத்தல்
அடிச்சான் பிடிச்சான் வியாபாரம்—மேல்விழுந்து செய்யுங் கொடுஞ் செய்கை
அடித்தல் திருத்தல் இல்லாமல் எழுது
அடித்தாலும் உதைத்தாலும் பொறுத்துக் கொளல்
அடித்துத் துவைத்தல்
அடித்து நொறுக்கி அழித்தல்
அடித்துப் பிடித்துக் கொண்டோடுதல் — வேகமாய் ஓடல்
அடித்துப் புடைத்தல்
அடித்துப் புடைத்துக் கொண்டு ஓடுதல்
அடிதண்டம் பிடிதண்டமான ஆள்—அடிமை; பூரணமாக வசப்பட்ட ஆள்
அடித்து நொறுக்குதல்
அடிதண்டம் பிடிதண்டம் — பூர்ணமாக வசப்பட்ட பொருள்
அடிதண்டம் பிடிதண்டமாய் அடிமைப்படுதல்

அடிப்படுத்து ஆளுதல்
அடிப்பும் அணைப்பும் அளித்தல்
அடிபட்டு உதைபட்டுச் செத்துப் போதல்
அடிபட்டும் மிதிபட்டும் அல்லலுறல்
அடிபரவித் தொழுதேத்தி ஆண்டவனை வணங்குவார்
அடிபிடி சண்டை
அடிமுதல் முடிவரை; முடிகாறும்
அடிமை முதல் அரசன் வரை
அடியற்ற மரம்போல அலறி விழுதல்
அடியும் உதையும் பெறுதல்
அடியும் முடியும் காண்டற்கரியவன் (சிவபிரான்)
அடியும் நுனியும் அறியாதிருத்தல்
அடியோடு ஆணிவேருடன் களைந்தெறிய வேண்டும்
அடிவயிற்றில் இடிவிழுந்தாற் போலாதல் (சந்திரிகா - 12)
அடித்து நொறுக்குதல்
அடுக்கடுக்காய் அடுக்கல்
அடுகிடை படுகிடையாய்க்கிடத்தல் — (1) படுத்துக் கொள்ளல். (2) நோய்வாய்ப்படுதல்
அடுத்தவர்களுக்கு அருள் செய்கின்ற ஆண்டவன் (மனுமுறை)
அடுத்துக் கெடுத்தல்—நம்பிக்கைத் துரோகம் செய்தல்
அடுத்து மடுத்துக் கேட்டல்
அடுத்தோரை ஆதரிக்கும் அருங்குணச் செல்வர்
அடுதீ யல்லது சுடுதீ யறியா நாடு—(புறம் 70)
அடுப்பும் துடுப்புமாய் இருத்தல்—சமைத்துக் கொண் டிருத்தல்
அடைக்கப் புடைக்க நடத்தல்—விரைவாக நடத்தல்
அடையலும் விடியலும் குருடனுக்கு ஏது

அடையா நெடுங்கதவும் அஞ்சலென்ற சொல்லும் உடையான் (பெ. தொகை 1495)

அண்ட பிண்ட அனைத்துப் பொருள்களும்

அண்ட பிண்டங்கள்

அண்ட பகிரண்டம் அனைத்திலும் நிறைந்த ஆண்டவன்

அண்டமும் அகண்ட பகிரண்டமும்—குமர.

அண்டரண்டத்தொடு அகிலாண்டம் படைத்தவன்— ஆண்டவன். குமர.

அண்டை அசல்காரர்கள்—நாடோடி

அண்டை அயல்—அக்கம் பக்கம்

அண்டை அயல் பார்த்துப் பேசு

அண்டை அயலார்க்குத் தெரியாமல் செய்

அண்டினோரை ஆதரிக்கும் ஆண்டவன்

அண்டை வீடு அடுத்த வீடு

அண்ணணித்தான—மிகவும் சமீபமான

அண்ணுந்து இறுமாந்து அடிகனத்துப் பூரித்த நகில்

அணங்கு நோய்செய்து அலர்தூற்றும் அனங்கன்— (நைட 254)

அணிந்து புனைந்து கொள்ளும்

அணியணியாக அடுக்கி வைத்திருத்தல்

அணைகடந்த வெள்ளம்போல் ஆர்வம் பொங்குதல்

அணைத்து ஆதரித்தல்

அணைத்து ஆரத் தழுவிக்கொள்ளல்

அணைத்துத் தழுவுதல்

அத்தை மகள் ரத்தினம்

அதட்டலுக்கும் அதிகாரத்திற்கும் கட்டுப்படல்

அதட்டலும் மிரட்டலும்

அதட்டி உருட்டிக் கேட்டல்

அதட்டி விரட்டுதல்

அதலகுதலம்—கலகம், குழப்பம், அமளி

அதவல் குதவல்—தீவனஞ்செரியாது கழிந்த மலம்

அதிகாரமும் அந்தஸ்தும் உடையவர்

அதிகாரமும் ஆதிக்கமும் செலுத்துவோர்

அதிசயமான அபூர்வமான வரலாறு—கல்கி

அதிர்ச்சியும் மிரட்சியும் அடைதல்

அதிருப்தியோ அசூயையோ கொள்ளாமை—கல்கி

அந்த சந்தமான ஆள்—அழகான ஆள்

அந்தம் இல் அரும்பெரும் புகழ் (கம்ப 2-1-43)

அந்தம் இல் உவகையோடும் அகங்களிப்புறல்—கூர்மபு 29-24

அந்தம் மிகுந்த சந்தத் தமிழில் எழுதுதல்

அந்தமில் இன்பத்து அழிவில் வீடு (பரிமேலழகர்)

அந்தமில்லதோர் வெந்துயர்க்கடலில் ஆழ்தல்—காசி கண்: 13-30)

அந்தமும் ஆதியுமில்லா அரும்பெருஞ் சோதி

அந்தி சந்திகளில் ஆண்டவனைத் தொழுதல்

அந்தீங்குதலை மழலை (குமர 391)

அந்தோ என்று அலறல்; இரங்குதல்

அநீதிகளையும் அக்கிரமங்களையுங் கண்டு கொதித்தல்—கல்கி

அப்பழுக்கற்ற அந்தணாளன்

அப்பழுக்கு இல்லாத தூயமனம்

அபகீர்த்திக்கும் அவமானத்துக்கும் ஆளாதல்—கல்கி

அபயம் அபயம் என்று அழுது புலம்புதல் (பஞ்ச. வனவாசம்-6)

அபயம் அபயமென்று அலறி முறையிடுதல்

அபயமளித்து ஆதரவாக நிற்றல்

அபிப்பிராய பேதங்களும் கொள்கை வித்தியாசங்களும்—கல்கி

அம்பலும் அலரும் தூற்றல்

அம்மவோ என அதிசயம் பூத்தல் (காசிகண்-89–2)

அம்மி மிதித்து அருந்ததி காட்டல் (திருமணச் சடங்கு)

அமளிகுமளிப்படுதல்—பேராரவாரம் உண்டாகும்

அமளிதுமளிப்படுதல்—அமர்க்களப்படுதல்; ஆரவாரம் உண்டாதல்

அமிர்தனைய மழலைமென் மொழிச்சிறுமகார் (சிவராத்பு-1-19)

அமிழ்தத்தன்ன அந்தீங்கிளவி (குறுந் 206)

அமிழ்தினில் தேனில் பாகினில் பழுத்த அம்தீஞ்சொல் (நைட 626)

அமிழ்தின் அன்ன அறுசுவை யடிசில் (பெருங்க 3-14-48)

அமிழ்தினும் இனிய தமிழ்

அமிழ்தினைச் சுவைசெய்தென்ன அழகினுக்கு அழகு செய்தார் (கம்ப 1-22-3)

அமிழ்து அன்ன சுவை இன்னடிசில் (கம்ப 4-14-54)

அமுக்கி அழுத்துதல்; ஆழ்த்துதல்

அமுதத்தீஞ்சொல் மெல்லிசை வீரும்பா(ட்டு)—திருவாலங்காட்டுப்பு.

அமுதவெண் கிரணத் திங்கள் (வில்லி. 11-7)

அமுதின் அன்ன அறுசுவை அடிசில் (பெருங் 2-2-80)

அமுது ஒழுகு புதுமொழி (நைட 2)

அமைதியாகவும் அடக்கமாகவும் இருக்கும்

அமைதியாகவும் ஒழுங்காகவும் நடந்துசெல்லல், கலைந்து செல்லல்

அமைதியாகவும் நிம்மதியாகவும் வாழ்க்கை நடத்துதல் (கல்கி)

அமைதியும் அடக்கமும் உடைய
அமைதியும் ஆழமும் நிறைந்த இசைவளம்
அமைதியும் சாந்தமும்
அமைதியும் சுபிட்சமும் நிலவுதல்
அமைவடக்கம்—பணிவடக்கம்
அயர்ச்சியின்றி முயற்சி செய்தல் அயற்ச்சி—தளர்ச்சி,
அயர்வு சோர்வின்றி உழைத்தல்
அயரா அன்பினில் அரன்கழல் சேரும் ஆன்மகோடிகள் (ஜி. சுப். பிள்ளை)
அயோக்கிய மோசக்காரத் திருட்டுப் பயல்கள் (கல்கி)
அர்த்தமற்ற குருட்டு நம்பிக்கை
அரட்டல் புரட்டல்—முற்றிய நோயால் ஏற்படும் வலி
அரட்டி மிரட்டுதல்
அரட்டுப் புரட்டு—பொய்ப்புரட்டு, பித்தலாட்டம்
அரடையும் புரடையும் திரித்தல் (பே)—அரட்டும் புரட்டும் பேசல்
அரசவைக்கு அணிசெய் சிங்க ஆசனம் (வில்லி 10-16)
அரதி மறதியாயிருத்தல்—ஞாபக மறதியாயிருத்தல்
அரதேசி பரதேசிகளுக்கு உணவளி
அரளைசரளை—பாதையிற்போடும் படுக்கைக் கற்கள்
அரற்றி அழுதல்
அரனே பரனே என்று ஆண்டவனைத் துதித்து (காத்தவராயன் கதை)
அராட்டுப் பிராட்டு—போதியதும் போதாததுமானது (சடு. 3-7-3)
அரிசி தவசி விலையேறிவிடல்
அரிய பெரிய காரியங்களை ஆற்றுபவர்
அரிய பெரிய செயல்களைச் செய்பவர்
அரியர பிரமாதிகளாலும் முடியாத காரியம்

அருட்குணமுடைய ஆன்றோர்
அருந்தகைமையும் ஆற்றலும் பெற்றவர்
அருந்தல் பொருந்தல்களில் அளவு மீறக்கூடாது
அருந்துயர் அவலந் தீர்க்கும் மருந்து (நற் 140)
அருந்துயர் ஆரஞர்
அருப்புத்துருப்பு—அருமை, அருந்தோட்டம்.
அரும்படரெவ்வம் (குறு ந் 360)
அரும்பயன் ஆயும் அறிவினர் (குறள் 198)
அரும்பெறல் கல்வியால் பெரும்பயன் பெற்றவர்
அருமை பெருமைகள் அறியாதவர்
அருமையும் அழகும் வாய்ந்த
அருவுருவாகிய ஆண்டவன்
அருவென்ன உருவென்ன அன்றென்ன நின்றவன்—இறைவன் (குமர 415)
அரிவையைப் பிணைந்து இணைந்து அணைந்து பிரியாதவர்—(சிவன்) - (ச. 136-3)
அருள்புரி நெஞ்சத்து அறவோர் (மணி 20-6)
அருள்பொழி திருவிழி—அருள்பொழியும் அழகிய திருக்கண்கள்
அருள்வலி ஆண்மைக்கல்வி அழகு அறிவு இளமை ஊக்கம் புகழ் உடையவர் (சிந். 1172)
அருளும் அன்பும் உடையோர்
அருளும் ஆசியும் அருளுதல்
அரைகுலையத் தலைகுலைய ஓடுதல்—மிக விரைவாய் ஓடுதல்.
அரைகுறையாய் நிறுத்திவிடல்
அரையுங் குறையுமாகச் செய்தல்—அரைகுறையாகச் செய்தல்
அரைவயிறு குறைவயிருக உண்ணுதல்

அரைவயிறுங் குறைவயிறுமாய்க் காலங் கழித்தல்
அரோக திடகாத்திரம்
அல்லல் அரும்படர் (நற் 307)
அல்லல் உழந்து அலமந்து ஆக்கை நிலை தளர்ந்தார்—(இரட்ச 21-315)
அல்ப சொல்பமான காரியம் அல்ல
அல்லலும் தொல்லையும் அளவிலாது எய்துதல்; எல்லையிலாது எய்துதல்
அல்லலுற்று அழுங்குதல்—(சிந் 258; நைட 849)
அல்லறை சில்லறை—மீதி, மிச்சத்தொகை
அல்லற்பட்டு ஆற்ருது அழுதல் (குறள் 555)
அல்லும் பகலும் அயராதுழைத்தல்
அல்லும் பகலும் அனவரதமும்
அல்லுச் சில்லுப்படுதல்—குலைதல்; சின்ன பின்னப்படுதல்
அல்லுஞ் சில்லுமாய்ப் பணம் கரைந்துவிடல்—சிறுசிறு தொகையாய்க் கரைந்துவிடல்
அல்லை தொல்லைகள் தீர்த்தல்
அல்லோல கல்லோலம்—ஆரவாரம், பேரொலி
அலங்க மலங்க—பொறிகலங்க
அலசி ஆராய்ந்து முடிவு காணல்
அலட்சியமாகவும் வெறுப்பாகவும் பேசுதல்—கல்கி
அலதி குலதி—அலங்கோலம்
அலந்தார்க்கும் அற்ருர்க்கும் அருள் செய்யும் ஆண்டவன்
அலந்து உழல்தல்—(அகம் 45)
அலம்பலும் அலசடியும்படல் (அலசடி-துன்பம்)
அலர்ந்த செந்தாமரைபோல் அகம்மிகக் குளிர்தல்—(பஞ்ச-வனவாசம் 2)

அலறி உலறி ஆவி சோர்ந்து நிற்றல் (திருவா. 5-22)
அலறிக் கலங்கிடல்
அலறிப் புடைத்துக்கொண்டு ஓடுதல்
அலறி வாய்குழறி நொந்து அழுதல் (வில்லி. 27-253)
அலுக்காமல் சலிக்காமல்
அலுக்கிக் குலுக்கிக் கொண்டுவரல்
அலுக்கிக் குலுக்கிக் கொண்டு நடக்கும் தலுக்குக்காரி
அலுங்காமல் அசையாமல்
அலுங்காமல் நலுங்காமல் வண்டியில் செல்லல்
அலுங்கிக் குலுங்கிப் போதல்
அலுத்துக் களைத்துப் போதல்
அலுத்துச் சலித்துப் போதல்
அலுத்துப் புலுத்து வந்தவன்
அலுப்பு சலிப்பாயிருத்தல்—களைத்திருத்தல்
அலுப்பும் ஆயாசமும் (தீர)
அலுப்போ சலிப்போ கொள்ளாதவர்
அலைகுலையத் தலைகுலைய ஓடுதல் — (காத்தவராயன் கதை ப-58)
அலைகுலையாக்குதல்—நிலைகுலையச் செய்தல்
அலைத்துக் குலைத்துக் கெடுத்துவிடல்
அலைத்து வருத்துதல் — அலைக்கழித்தல்
அலைந்து உலைந்து அழிதல்—(திருப்பு 322)
அலைந்து உலைந்து நலிந்து துயருறல்
அலைந்து திரிந்து உழல்தல்
அலைமோதி அலைக்கழிக்கும், மனத்துள் சிந்தனைகள்
அலைவாய்த் துரும்புபோல் உழல்தல் (உண்ணு. பதி-2)
அவசரப்படாமலும் ஆத்திரப் படாமலும் காரியம் செய்தல்
அவசரமும் பரபரப்பும் கொண்டிருத்தல்

அவசியமும் அவசரமுமான வேலைகள்
அவதியும் அவமானமும் அடைதல்
அவமதித்து அலட்சியமாய் நடத்தல்
அவமதிப்பும் அவதூறும் செய்தல்
அவ்வியம் அவித்த சிந்தை அருந்தவர் (வேங்கடபு-1-21)
அவலித்து ஆற்ருது அழுதல் (சிந்-1399)
அவளைதுவளை—கதம்ப உணவு, தாறுமாறு
அவனன்றி ஓர் அணுவும் அசையாது
அவிச்சுவையல்லது கவிச்சுவையறியாதார்
அவிர்துகில் புரையும் அவ்வெள் அருவி (குறிஞ்சிப் 55)
அவிழ்ச் சுவையன்றித் தமிழ்ச்சுவை யறியாதவர்
அவிழ்த்து நெகிழ்த்தல்
அழகாக அலங்காரமாக அணி செய்து கொள்ளல்
அழகு ஒழுக எழுதுதல்; பேசுதல்
அழகு ஒழுகும் எழில் முகம்
அழகுக்கு அழகு செய்யும் அணங்கு
அழகும் அமைதியும் நிலவும் இடம்
அழகும் அருமைப்பாடும்
அழகும் அறிவும் ஒருங்கே யமைந்தவர்
அழகும் இளமையும் வாய்ந்தவர்
அழித்து ஒழித்து விடல்
அழித்துக் குலைத்தல்
அழிந்தொழிந்து போதல்
அழுக்கு மல இருள் முழுக்கின் உழல்தல் (திருப்பு.)
அழுங்கி அரற்றுதல்
அழுகள்ளன் தொழுகள்ளன்—பாசாங்கு செய்வோன்
அழுகள்ளன் தொழுகள்ளன் ஆசாரக்கள்ளன்

அழுகையும் ஆத்திரமும் பீறிட்டுக் கொண்டுவரல்; பீறிக்கொண்டு வரல்

அழுகையும் கண்ணீருமாயிருத்தல்

அழுங்கிப் புழுங்கிச் சாதல்-பொருமையால் புழுங்குதல்

அழுத்தந் திருத்தமாக வலியுறுத்திச் சொல்லுதல்; பேசுதல்

அழுத்தந் திருத்தமாகவும் ஆணித்தரமாகவும் கூறல்

அழுத கண்ணீரும் தொழுத கையுமாக இருந்தாள்

அழுத கண்ணும் சிந்திய மூக்குமாய்க் கலங்கி நிற்றல்; வருந்தி நிற்றல்

அழுது அரற்றுதல்

அழுது தொழுது வழிபடல்

அழுது புலம்பி அலமருதல்

அழுதும் அரற்றியும் அலறியும் உலறியும் (கண்ணீரைப் பெருக்கல்)

அழுதும் அரற்றியும் புலம்புதல்

அழுது தொழுது பெற்றுவிடல்

அழுது நைந்து உருகுதல்—(சிந் 1393)

அழுது வடியும் முகம்

அழுந்திக் கிடந்து உழலும்

அழையா வீட்டிற்கு நுழையா விருந்தாளி

அள்ளித் துள்ளுதல்—மிகச் செருக்குதல்

அவிழ்த்து நெகிழ்த்தல்

அள்ள அள்ள எடுக்க எடுக்கக் குறையாத

அள்ள அள்ளக் குறையாத ஆனந்தத் தெள்ளமுதம் —(செந். மு. சந் 34-4)

அள்ளாடித் தள்ளாடி நடத்தல்—நடை தளர்ந்து, மயங்கி நடத்தல்

அள்ளி அணைத்தல்

அள்ளித் துள்ளுதல்—கர்வங் கொள்ளுதல்

அளவிட்டு மதிப்பிட முடியாத

அளவையால் அளப்பரும் அரியசோதி—(நாகை-பு. 4-42-41)

அளாய்க்குழாயாய்ச் செய்தல்—பரபரப்பாய்ச் செய்தல்

அளிகளியத் திருவருள் கனியுங்கனி—உமையம்மை (குமர-81)

அருட்டுப் பருட்டு—போதியதும் போதாததும்

அற்பசொற்பமானவன் அல்லன்

அற்பசொற்பம்—மிகக்கொஞ்சம்; சிறிதளவு

அற்பத்துக்கு அற்பமான காரியங்கள் (புதுமைப்)

அற்பமாகத் துச்சமாக மதித்தல்

அற்புதம் அதிசயம் அசாத்தியம்—கல்கி

அற்புதமாகவும் அழகாகவும் அமைந்திருத்தல்

அற்றகுற்றம்—பெருஞ்சேதம், பொருள் நட்டம்

அற்றகுற்றம் பார்க்க ஆள்கிடையாது. (பழுது, கேடு.)

அற்றது பற்றெனில் உற்றது வீடு—பழ

அற்றார்க்கும் அலந்தார்க்கும் அன்புடன் அளித்தல்—நவநீதகி.

அறக்கப் பறக்கப் பாடுபடுதல்; ஓடுதல்

அறந்தரு நெஞ்சின் அறவோர்—(சிலப். 15-7)

அறநெறி வாழும் அருநிலையர்

அறம் கரைநாவின் ஆன்றோர் (ஞாகு 24)

அறம் பொருள் இன்பம் வீடு

அறம்புரி நெஞ்சின் அறவோர்—(சிலப். 15 - 115)

அறம் புறம் எல்லாமறிதல்—முழுதும் ஆய்ந்தறிதல்

அறம் முதல் நான்கும் திறமுற ஆற்றுதல்

அறமும் மறமும் அறிந்துணர்ந்தவன்

அறவோரும் திறவோரும் புகழும் அறிஞர்

அறவோரும் துறவோரும் வணங்கும் கடவுள்

அறனறிந்து ஆன்றமைந்த சொல்லான் (குறள் 635)
அறிமுகமும் பரிச்சயமும் (கிடைத்தல்)
அறியாமலும் தெரியாமலும் செய்த பிழை
அறிவுக்குப் பொருந்தாத ஆபாசங்கள்
அறிவும் அநுபவமும் ஒருங்கே பெற்றவர்
அறிவும் அழகும் நிரம்பியவன்(ள்)
அறிவும் அனுபவமும் உடையவர்
அறிவும் ஆண்மையு முடையவர்
அறிவும் திருவும் செறிந்த செல்வர்
அறிவுள் அறிவை அறியுமவரும் அறியவரிய பிரமம்—கடவுள் (குமர 409)
அறிவைக் கெடுக்கும் அபத்தக் களஞ்சியங்கள்—

அறிஞர்க்கு அழகு அகத்துணர்ந்து அறிதல் (பழ)
அறிந்தும் புரிந்தும் வைத்திரு
அறியாமல் தெரியாமல் செய்த சிறுபிழை
அறிவிலும் புத்திநுட்பத்திலும் சிறந்து விளங்கியவர்
அறிவுறுத்தித் தெருட்டல்
அறிவும் ஆற்றலும் வாய்ந்த
அறிவும் செல்வமும் ஒருங்கே செறிந்த
அறிவு நினைவு இல்லாதவன் (பே)
அறுக்கப் பொறுக்கப் பாடுபடல்
அறுதி யுறுதி—அறுதிச் சீட்டு
அறைகூவி அழைத்தல்
அறைபறை யன்னர் கயவர் (குறள் 1076)
அறைமுறையிடுதல்—குறை தெரிவித்தல்
அன்பர் என்புருகக் கசிந்திடுபசுந்தேன் (குமர 69)
அன்பாதரவுடன் வரவேற்றல்
அன்பின் மேம்பட்ட நண்பர் (மறைமலை)

அன்பு அறிவு சாந்தம் அருளுடையார் (நீதி வெ. 94)
அன்புகொண்டு ஆதரித்து உதவல்
அன்புடன் அளிப்பதை இன்புடன் ஏற்றுக்கொள்ளும் பண்பினர்.
அன்புடனும் அனுதாபத்துடனும் பேசல்
அன்பும் அக்கறையும் செலுத்துதல் (அண்ணா)
அன்பும் அபிமானமும் காட்டுதல்
அன்பும் அமைதியும் ததும்பும் இன்பமுகம்
அன்பும் அருளும் அறமும் உடையவர்
அன்பும் அனுதாபமும் காட்டுதல்
அன்பும் ஆசையும் காட்டுதல்
அன்பும் ஆதரவும் காட்டுதல்
அன்பும் இன்பமும் பெருக வாழ்தல்
அன்பும் பண்பும் உடையவர்
அன்பும் பண்பும் நண்பும் நிறைந்தவர்
அன்பும் மதிப்பும் காட்டல்
அன்புடனும் மரியாதையுடனும் நடத்தல்
அன்போடும் அச்சத்தோடும் வணங்கல்
அன்போடும் ஆதரவோடும் அளித்தல்
அன்போடும் பரிவோடும் கூறல்
அன்றும் இன்றும் இனி என்றும்
அன்றும் இன்றும் என்றும் நிலைநிற்கும்
அன்றுதொட்டு இன்று காறும் (குமர 470)
அன்றுதொட்டு இன்று மட்டும் (செந்திற்கோ 423)
அன்றுமுதல் இன்றுவரை நின்று நிலவும்
அன்ன ஆகாரமில்லாதிருத்தல்
அன்ன நடை போடும் கன்னி
அன்னபானங்கள்

அன்னமிட்டவரைக் கன்னமிட எண்ணுதல்—இரண்டகம் செய்யக் கருதுதல்
அன்னமும் சொன்னமும் தானம் செய்தல்
அன்ன மென்னடை அணங்கு
அன்னுகாரம் இன்றிப் பட்டினி கிடத்தல்
அனுபவமும் திறமையும் உள்ள வைத்தியர்
அஸ்திர சஸ்திரங்களுடன் போரிடல்
ஆக்கவும் அழிக்கவும் வல்லவர்
ஆக்கமும் ஊக்கமும் அளித்தல்
ஆக்கமும் கேடும் அனைவர்க்கும் உண்டு
ஆக்கவும் காக்கவும் அறிவாயா ?
ஆக்கி அரித்துப் போடும் அகத்தரசி
ஆகாசக் கோட்டைகளும் மனோராஜ்ய மாளிகைகளும் இடிந்து தகர்ந்து பொடிப்பொடியாகிக் காற்றிலே பறந்து மண்ணிலே விழுந்து மண்ணோடு மண்ணாகி மறைந்து தொலைந்து போதல் (கல்கி-அலை)
ஆச்சரியமும் ஆனந்தமும் அடைதல்
ஆச்சி பூச்சி விளையாடுதல்—கண்ணாம்பூச்சி விளையாடுதல்
ஆசாபாசங்களை அறவே அறுத்தெறிந்துவிடல்
ஆசாபாசத்தோடு அணைத்து முத்தமிடல்
ஆசாபாசம்—பந்தபாசம்
ஆசார அனுட்டானங்கள்
ஆசார உபசாரம் செய்தல்
ஆசார ஒழுக்கம்
ஆசார உபசாரம் செய்தல், ஆசாரோபசாரம் செய்தல்
ஆசை அன்பு இல்லாதவன்
ஆசைக்கு மோசம் இல்லை (பழ)
ஆசைகாட்டி மோசம் செய்தல்

ஆசையும் அன்பும்

ஆசையும் பாசமும் அதிகமாய்க் காட்டுபவர்

ஆசையும் பாசமும் அன்பும் உடையவர் (அறநெறிச் 113)

ஆசையோடு பெற்றெடுத்து அருமையாக வளர்த்தல் (வளர்த்த பிள்ளை)

ஆட்டம் பாட்டம் அபாரம்!

ஆட்டி அசைத்துப் பார்த்தல்

(காதை) ஆட்டி அலைத்து நடந்து வருதல்

ஆட்டியலைத்தல்—மிக வருத்துதல்

ஆட்டும் பாட்டுமாயிருக்கும் வீடு

ஆடகத்து இயன்ற கூடகம்-பொன்வளை (குமர 582-12)

ஆடகப் பசும்பொன் பாடகச் சீறடி நாடக மகளிர் (தணி-ஆற் 330)

ஆடம்பரமாகவும் படாடோபமாகவும் செய்தல்

ஆடம்பரமோ டாம்பீகமோ இல்லாமல்

ஆடல்பாடல் கண்டும் கேட்டும் களித்தல்

ஆடலும் பாடலும் வல்ல மகளிர்

ஆடாத ஆட்டமெல்லாம் ஆடுதல்

ஆடாமல் அசையாமல் அப்படியே நிற்றல்

ஆடி அசைந்து நடந்து வரல்

ஆடியும் அலறியும் பாடியும் பரவியும் தொழுதல்—(திருவா 4-62)

ஆடி ஓடி அலைந்து திரிதல்

ஆடிப் பாடி அகமகிழ்தல்; பரவசமாயிருத்தல்

ஆடிப்பாடி அழுது நெக்கு அங்கு அன்புடையவர்—(கந் 5-5)

ஆடியும் பாடியும் அரற்றியும் பிதற்றியும் அரனைத் தொழுதல்

ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியும் ஆண்டவனைத் தேடுதல்

ஆடியும் பாடியும் மகிழ்தல்

ஆடு மாடுகள்—கன்று காலிகள், கால்நடைகள்

ஆடை அணிகலன்கள் பூண்ட

ஆடை அணிகள் பூண்டு கொள்ளல்

ஆடை அலங்காரம்

ஆடை ஆபரணங்கள்

ஆடைக்குங் கோடைக்கும்(—எல்லாப் பருவத்துக்கும்) உரிய ஆடை; வற்றாத கிணறு

ஆடை யணி அலங்காரங்கள்

ஆண் சிங்கம்போல் ஆண்மையுடையவன்

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும், மாண்டார் வருவாரோ?

ஆண்டான் அடிமை என்ற வேறுபாடின்றி

ஆண்டிப் பரதேசி (கல்கி)

ஆண்டு அனுபவித்தல்

ஆண்மையும் அறிவும் ஊக்கமும் உறுதியும் பெற்றவர்

ஆணவமும் அகந்தையும் (அகங்காரமும்) உடைய

ஆணவமும் அட்டகாசமும் கொண்ட சொற்களை வீசுதல் (அண்ணா)

ஆணவமும் இறுமாப்பும் அதிகமாய் விடல்

ஆணையிட்டுச் சூளுறவு செய்தல்

ஆத்திர அவசரத்திற்காகப் பணம் ஒதுக்கிவைத்திருத்தல் (நாடோடி)

ஆத்திரப்பட்டு அவசரப்பட்டுப் பயனில்லை

ஆத்திரமும் அவசரமும் அடைதல்

ஆத்திரமும் அழுகையுமாய்ப் பேசல் (கல்கி - அலை)

ஆத்திரமும் ஆவேசமும் அடைதல்

ஆதம்பாதமில்லாதவன் - ஆதரவில்லாதவன்

ஆதரத்தோடு ஆதரித்தல் - அன்போடு ஆதரித்தல் (திருப்பு 327)

ஆதனை மாதனை - மனக்கலக்கம்

ஆதாளி பாதாளியாய் (—ஆரவாரமாய்) இருத்தல்

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி (திருவா 155)

ஆதியும் அந்தமும் இல்லா ஆண்டவன்; ஆனந்த வெள்ளம்

ஆதியும் அநாதியும் ஆன கடவுள்

ஆதியோடந்தமாகக் கூறுதல் - முதலிலிருந்து முடிவு வரை கூறுதல் (பிரதாப 17)

ஆபத்து சம்பத்து - வாழ்வுதாழ்வு, இன்பதுன்பம், சுக துக்கம்.

ஆபத்து சாபத்துக்கு உதவும் பணம்

ஆபாசமும் அலுப்பும் தீர

ஆபாசமும் அழுக்கும் சேர்ந்திருக்குமிடம்

ஆமையைப் போல அடங்கி ஒடுங்குதல்

ஆமாலை சோமாலை - திக்குமுக்கு, மிகுசோர்வு

ஆய்ந்தமைந்த கேள்வி அறிவுடையார் (நாலடி 63)

ஆய்ந்தோய்ந்து தேர்ந்து தெளிதல்

ஆய்ந்தோய்ந்து பார்க்காமல் அவசரப்பட்டுச் செய்தல்

ஆய்ந்தோய்ந்து பார்த்தல்

ஆயிற்று போயிற்று என்று அரட்டுதல்

ஆயிற்றுப் போயிற்று என்று கிடத்தல் - சாப்படுக்கையில் கிடத்தல்

ஆயுந்தொறுந்தொறும் இன்பம் தருந்தமிழ்

ஆர்ந்து அமர்ந்து செய்தல்

ஆர்வம் பொங்க அணைத்துக் கொள்ளல்

ஆர்வமும் அக்கறையும் காட்டுதல்
ஆர்வமும் ஆவலும் உடையவர்
ஆர்வமும் உற்சாகமும் உள்ளவர்
ஆர்வமும் ஊக்கமும் அசையா உள்ளமும் கொண்டு உழைத்தல்
ஆர்வமும் ஊக்கமும் காட்டுதல்
ஆர அமர ஆலோசித்துத் தீர முடிவு செய்தல்
ஆர அமர ஆராய்தல் ; சிந்தித்தல் ; ஆலோசித்துப் பார்த்தல்
ஆர அமர யோசித்து முடிவு செய்தல் (கல்கி)
ஆர தீர யோசித்தல்
ஆரந்தாழ்ந்த அணிகிளர் மார்பு (புறம் 59)
ஆரமும் அகிலும் நாறும் அருவியும் சுனையும் (வில்லி 12-2)
ஆரவார ஆடம்பர முறைகளின்றிச் செயல் செய்தல்
ஆரவாரத்துடனே ஆர்ப்பரித்துக் கொக்கரித்து (இராமப். அம் 14)
ஆரவாரமின்றி அமைதியாகச் செய்தல்
ஆரவாரமும் ஆர்ப்பாட்டமும் செய்யும்
ஆராதனை செய்து அருச்சித்துப் பூசித்து அடிபணிதல் (வராகிமாலை 2)
ஆராமை சோராமையாயிருத்தல் - மிகக் களைப்பாயிருத்தல்
ஆராய்ந்து உணர்ந்து பேசுதல்
ஆராய்ந்து தெளிதல்
ஆருமற்ற அத்தவனக் காடு
ஆருயிரே செல்வமே அமுதே யருங்கிளியே என்று அழுது புலம்பல் ; கொஞ்சுதல்
ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி மூங்கில் போல் எந்நாளும் முசியாமல் வாழ்ந்திடுவீர் (பஞ்ச வனவாசம் 4)

ஆலமுண்ட நீலகண்டன்

ஆலே பூலே என்று அலுப்பிக் கொண்டிருத்தல்

ஆலைமாலை - ஆவட்டை சோவட்டை, சோர்வு, களைப்பு, தொந்தரவு

ஆவட்டை சோவட்டையாயிருத்தல் - மிகக்களைத்தல், மூச்சுவாங்கல், இறக்கும் நிலையில் இருத்தல்

ஆவட்டை சோவட்டையாய் விழுதல் - சோர்ந்து விழுதல்

ஆவதும் அழிவதும் பெண்ணாலே

ஆவலம் கொட்டி ஆர்த்தல் - (மகிழ்ச்சியால்) கை கொட்டி ஆர்ப்பரித்தல் (கம்ப 6-1874)

ஆவலும் பரபரப்பும் ஏற்படல்

ஆழ்ந்தகன்ற நுட்ப அறிவினால் நுணுகியறிதல்

ஆழ்ந்து அமிழ்ந்து கிடக்கும் - ஆழ்ந்து புதைந்து கிடக்கும்

ஆழமும் அகலமும்

ஆழும்பாழும் ஆக்கல் - வீணாக்கல்

ஆழும்பாழுமாய் அழிந்து போன ஊர்

ஆற அமர (—மெதுவாய், அமைதியாய், சாந்தமாய், சாவதானமாய்)ச் செய்தல், யோசித்தல்

ஆறல் பீறல் - உபயோகமற்ற பீறல் சாமான்

ஆற்றலும் அழுத்தமும் பெறும் சொல்

ஆற்றலும் அனுபவமும் உடையவர்

ஆற்றலும் ஆண்மையும் உடையவர்

ஆற்றார்க்கும் அலந்தார்க்கும் துணையான ஆண்டவன்

ஆற்றித் தேற்றுதல் - சமாதானப்படுத்துதல்

ஆற்றிப் போற்றிக் கொளல்

ஆரூட்டம் போராட்டமாயிருத்தல்

ஆளும் தேளும் அற்ற இடம்

ஆறு கிடந்தன்ன அகல் நெடுந்தெரு (நெடுநல் 30; நற் 200)

ஆறுதலும் தேறுதலும் கூறுதல்

ஆன்றமைந்த கேள்வியுடை அறிஞர்

ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர் (புறம் 191)

ஆன்றோரும் சான்றோரும் அமர்ந்திருக்கும் அவை; நிறைந்த நாடு

ஆனந்தமும் களிப்பும் அடைதல்

ஆனைக்கும் பூனைக்கும் உள்ள தூரம்

ஆனைசேனை - மிகுதி

ஆஸ்தி பாஸ்தி ஒன்றுமில்லாதவன்

இக்குப் பிக்கு - இசகு பிசகு, ஏறுமாறு, தாறுமாறு

இகபர இன்பங்கள் எய்துதல்

இகபரம் இரண்டிலும் இன்பம் எய்தல்

இகழ்ச்சியும் இழிவும் எய்துதல்

இகழ்ச்சியையும் மகிழ்ச்சியையும் பொருட்படுத்தாத

இகழ்ந்து எள்ளுதல்; புறக்கணித்தல்

இகழ்புகழ் இரண்டையும் சமமாக மதித்தல்

இசக்குப் பிசக்காய் நடத்தல்

இசகுபிசகாய்ப் பேசுதல்; ஏதாவது செய்துவிடல்; நடத்தல்; மாட்டிக் கொள்ளல்

இசையும் வசையும் பொருட்படுத்தாமல் இருத்தல்

இசையோர்த்தன்ன இன்தீங் கிளவி (அகம் 212)

இசைவாகவும் இனிமையாகவும் பேசுதல் (மறைமலை)

இட்டது சட்டம் வைத்தது வரிசை

இட்டலிடைஞ்சல் - இடையூறு, தரித்திரம், துன்பம்

டக்கு மடக்கான பேச்சு

இடக்கு மடக்கு - குதர்க்கம்

இடக்கு முடக்கு - சங்கடம், இடையூறு, துன்பம்.

இடம் பொருள் ஏவல் எல்லாம் நன்றாகமைந்திருத்தல்; எல்லாம் உடையவர்

இடாமுடாங்கு—ஏறுமாறு, தாறுமாறு, ஒழுங்கீனம்

இடி இடித்தெனை வெடிபடச் சிரித்தல் (வில்லி 3-129)

இடித்துத் தகர்த்தல்

இடித்துப் பிடித்துக்கொண்டு செல்லல் - முட்டி மோதிக் கொண்டு செல்லல் (கல்கி)

இடித்துப் புடைத்துக்கொண்டு பஸ்ஸில் ஏறுதல்

இடுக்கண்களும் இடையூறுகளும் இன்னல்களும் - (நெடுஞ்செழி)

இடுக்கு முடுக்கு - மூலை முடுக்கு

இடைசாய நடைபயிலும் மடமாதர்

இடைஞ்சலும் இடுக்கணும்; இன்னல்களும் (இல்லாமல்)

இடைந்து பின் வாங்குதல்

இடையழகும் நடையழகும் உடையவள் (மின்னொளி கு)

இடையறவில்லா இன்பப் புணர்ச்சி (பெருங் 4-4-114)

இடையூறின்றி இனிது நிறைவேறல்

இடையூறும் இடுக்கணும் விளைவித்தல்

இடையூறோ இடங்காடோ இல்லாத இடம்

இணக்க வணக்கமாகப் பேசுதல்

இணை இணையாகக் கூடிவாழும் விலங்குகள்

இணைத்துக் கட்டுதல்

இணைந்து இழைந்திருத்தல்

இணைந்து உறவாடல்

இதமுண்டாக இச்சக வார்த்தைகள் பேசல்

இதயம் ஒத்து இசைதல் (வில்லி 1-25)

இதயமில்லையா இரக்கமில்லையா
இதயமோடு இறுகுறத்தழுவுதல் (வில்லி 1-107)
இந்திரன் சந்திரன் என்று ஏத்திப் புகழ்தல்
இந்திரன் சந்திரன் தேவேந்திரன் என்று புகழ்தல்
இந்துவர எழுந்த சிந்து என மகிழ்தல் (வில்லி 34-24)
இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் பயப்பது
இமிழ் கடல் வேலித் தமிழகம்
இயலும் செயலும் ஒத்திருக்கும்
இயன்றவரை முயன்று பார்த்தல்
இயைபும் பொருத்தமுமில்லாத
இரக்கம் என்று ஒருபொருள் இலாத நெஞ்சினர்--அரக்கர் (கம்ப 3-3-12)
இரக்கமில்லையா இதயமில்லையா
இரவலர் இல்லையேல் புரவலர் இல்லை
இரவென்றும் பகலென்றும் பாராது வேலையில் ஈடுபடல்
இரவும் எல்லையும் (அகம் 313)
இரவுபகல் எந்த நேரமும்; நேரத்திலும்
இருசெவிக்கு இனியது இளங்குதலையர் இன்சொல் (வில்லி 16-56)
இருட்டு வீட்டில் குருட்டுக் காக்காய் ஓட்டுதல்
இருண்டு சுருண்ட மயிர்
இருதயத்தின் அடிப்பும் துடிப்பும் (கல்கி)
இருந்த இடம் தெரியாமல் மறைந்தொழிதல்; பறந்து போதல்
இருந்தும், கிடந்தும், நடந்தும் இறைவனை நினைந்திருப்பார் (அடியார்)
இருபகட்டொரு சகடு

இருவல் நொருவலான அரிசி—இடிந்தும் இடியாததுமான அரிசி

இருவினை யொப்பு மலபரிபாகம்

இரைச்சலும் சந்தடியுமாயிருக்கும் இடம்

இரைத்துத் திரைத்து நுரைத்து ஓடும் பேராறு (குமர 27)

இரைத்துத் திரைத்து நுரைபொங்குங்கடல் (தணிகைச்சந். மு 31

இல்லது இனியது நல்லது என்று புலவரால் நாட்டப்பட்ட நூல் (களவியலுரை)

இல்லறம் என்னும் நல்லறம் புகும் மணநாள்

இல்லாததும் பொல்லாததும் சொல்லாதே

இல்லாது பிறவாது அள்ளாது குறையாது (பழ)

இல்லாரை எல்லாரும் எள்ளுவர் (குறள் 752)

இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை (மூதுரை 21)

இலக்கண இலக்கியம் விளக்கமாய்க் கற்றவர்

இலகு பேரெழில் திருமேனி (இரட்ச 21-410)

இலகி ஒளிரும்

இலைமறைவு காய்மறைவாய்ச் செய்தல் - இரகசியமாகச் செய்தல்

இவ்வளவு அவ்வளவு என்று கூறமுடியாது

இழித்த புன்சொற் புன்புலவர் (சிவப்பிர)

இழித்தும் பழித்தும் பேசல்

இழிந்து தாழ்தல்

இழிவும் இகழ்ச்சியும்

இழிவும் கேடும் எய்தாமல் பார்த்துக்கொள்

இழிவும் பழியும் (எற்படினும்)

இழுப்புப் பறிப்புப்படல் - அவதிப்படல், தொந்தரவு படல், துன்பப்படல்

இழுப்பும் பறிப்புமாய்க் கிடத்தல்

இழுமென் மொழித்தெளி தமிழ் (குமர 440)

இழுமென இழிதரும் அருவி (முருகாற்றுப் 316 ; புறம் 399

இழுமெனும் ஓசையின் ஒழுகுறும் அருவி

இழுமெனும் ஓசையுடைய மதுரத் தமிழ்மொழி (கல்கி)

இழை மருங்கு அறியா நுழை நூற்கலிங்கம் (மலைபடு 561)

இழையத் தீட்டிக் குழைய வடித்தல்

இளகி உருகும் இதயம்

இளநிலவு எறிக்கும் குளிர்மதிக் குழவி (குமர 829)

இளகிய இதயமும் இன்சொல்லுமுடையவர்

இளப்ப சளப்பமாக எண்ணுதல்

இளமையும் எழில் வனப்பும் உடையவர்

இளமையும் எழிலும் காதலும் உடையவர்

இளமையும் யாக்கையும் வளமையும் நிலையா (தமிழ்ப்பா 371-32)

இளமையும் வளமையும் உடைய மாணவர்கள்

இளமை யெழில் கொழிக்கும் அழகி

இளைத்துக் களைத்தல் (வீர வி 6-82)

இளைத்து மெலிந்திருத்தல்

இளைப்பினும் களைப்பினும் சோர்வுற்றிருத்தல்

இளைப்பு சளைப்புக் கொள்ளாதவன்

இற்றிடை மெலியச் செம்மாந்து எழுநகில் (நைட 832)

இற்றைக்குச் சற்றேறக்குறைய...ஆண்டுகட்கு முன்பு

இறக்கை கட்டிப் பறத்தல்

இருட்டுப் பிருட்டு - சண்டை சச்சரவு

இறைஞ்சி ஏத்துதல்
இறைவன் திருவருள் துணைகொண்டு செய்தல்
இறுகிக் கெட்டியான
இறுதிவரினும் உறுதிகூறும் அமைச்சர்
இன்அமிழ்தின் கன்னல் பாகின் கோற்றேனின் கனியின் கனிந்தமொழி (நைட 25)
இன்கனி மகிழ்நகை (புறம் 71)
இன்கனி மழலைச் செவ்வாய்ப் புத்திரன் (காசிகாண்டம்)
இன் சொல்லே கூறி இதமே செய்பவன்
இன்பத்தை அனுபவிக்கும் இளமைப்பருவம் (மனுமுறை)
இன்பதுன்பம் - சுகதுக்கம்
இன்புறு நன்மொழி கூறுதல்
இன்முகமும் புன்னகையும் பூத்து வரவேற்றல்
இன்னல்களும் இடையூறுகளும்
இன்னாவும் இடுக்கணும் (எண்ணில வரினும்)
இன்றை அரும்படர் (நெடுநல் 167)
இன்னார் இனியார் என்று பாராமல்
இன்னார் இனியார் என்று எண்ணாமல் (திவ் 571)
இன்னிசைத் தீம்பாடல்கள்
இன்று நேற்றுத் தோன்றியதன்று, என்றென்றும் இருந்து வருவது
இனஞ்சனங்களுக்கு உதவுதல் (இனஞ்சனம் - சுற்றத்தார், உறவினர்)
இனத்தார் சனத்தார்களுக்கு உதவுதல்
இனஞ்சனமுமாயிருத்தல் - உற்றார் உறவினருடனிருத்தல்

இறும்சனும் எதுவும் கொடுக்காதவன் (இறும்சனும் - சிறுகொடை)

இனித்துச் சுவைக்கும் பழம்

இனி நமக்கென்ன குறை என்று எண்ணி இறுமாப் படைதல்

இனிமையும் எளிமையும் உடைய (இலக்கிய) நடை

இனிய தெள்ளமுதினும் இனிக்குஞ் சுவைத்தமிழ் - (தியாகராசச் செட்டியார்)

இனைந்து நைந்து அழுது இரங்குதல் (வில்லி 20-259)

இனைந்து நொந்து அழுதனள் நினைந்து நீடு உயிர்த் தனள் (கலித் 142)

இஷ்டா நிஷ்டம் - விருப்பு வெறுப்பு

ஈகையிரக்கம் இல்லாதவன்; உடையவன்

ஈடில்லாத பெருமையினைத் தேடியளித்தவர் - 'சொல் லின் செல்வர்;'-94 (நவநீத)

ஈடு இணையற்ற — ஒப்பற்ற

ஈடும் எடுப்பும் இல்லாதவர், அற்றவர் - ஒப்பில்லாதவர்

ஈடு செய்ய முடியாத இழப்பு

ஈடு சோடு இல்லாதவள் - இணை, பொருத்தம் இல் லாதவள்

ஈடு ஜோடியான - இணையான

ஈர்க்கிடை புகாமல் அடிபரந்தோங்கும் ஏரிளவனநகில்- (நைட 621)

ஈர்ங்கை விதிராத இவறி (இவறி—உலோபி)

ஈரமும் அருளும் ஒழுக்கமும் சால்பும் இன்சொலும் இந் தி(ரி)யப் பகைவெல் வீரமும் அருள்க - (சோணு சல 48)

ஈயாத லோபி (கயிலாச சத)

ஈ யெறும்புகள் மொய்த்தல்

ஈவிரக்கம் - தயவு தாட்சணியம்

ஈவிரக்கம் பச்சாத்தாபம் எதுவும் இல்லாமல்
ஈவு இரக்கமின்றி அடித்தல்
ஈவு சோர்வு (—சமய சந்தர்ப்பம்) அறிந்து பேசுதல்
ஈறும் முதலும் இல்லாத இறைவன்
ஈனம் மானம் இல்லாதவன்
உச்சி உமித்துப் போதல்; உச்சி உளுத்துப் போதல்
உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரை
உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால்வரை
உச்சி முதல் உள்ளங்கால் வரை
உச்சிமேல் வைத்து மெச்சுதல்
உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர்
உடம்பு உலர்ந்து மெலிந்து போயிருத்தல்
உடல்பொருள் ஆவி மூன்றையும் ஒப்புவித்தல்
உடல் புளகித்து உள்ளம் எலாம் உருகிநிற்றல் - (வில்லி 11–246)
உடல் பொருள் ஆவியைக் கொடுத்து உழைப்பவர்
உடல்பொருள் உயிர் மூன்றையும் அளித்தல்
உடல் நலிந்து மெலிந்து வருந்துதல்
உடலுருகி ஊனுருகி உளம் உருகி நிற்றல் (கல்கி)
உடை நடையால் உயர்வு தாழ்வு காணல்
உடைமையுஞ் செல்வமும் ஒரு வழி நில்லா
உண்டி உறக்கம் இல்லாமல் உழைத்தல்
உண்டி உறையுள் வசதி
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே (மணி 11-96; புறம் 18)
உண்டு உடுத்து உறங்கி வாளுள் போக்கல்
உண்டுடுத்து உலாவி உயிர் வைத்திருத்தல் (இராமலிங்கர்)

உண்டுடுத்து உழல்வார் (சிவஞானபா - கலம் 9)
உண்டுடுத்து ஊரார் மதிக்க வாழ்தல்
உண்ணுமலும் உறங்காமலும் வேலையில் கண்ணு யிருத்தல்
உண்பதும் உறங்குவதும் தவிர ஒன்றும் செய்யாதவன்
உண்மைக்கு மாருனவை, நீதிக்குப் புறம்பானவை
உணர்ச்சிகளையும் உள்ளக் குமுறல்களையும் எடுத் துரைக்க முடியாது
உணர்ச்சியும் உயிர்த்துடிப்பும் நிறைந்த கவிதை
உணர்ச்சியும் எழுச்சியும் ஊக்கமும் கொண்ட
உணர்வும் ஒளியும் ஊக்கமும் உணர்ச்சியும் உடையவர் (பெருங்க 1-34-13)
உணர உணரும் உணர்வுடையார் (நாலடி 247)—பிறர் கருத்தைக் குறிப்பாலுணர்வார்
உணவும் உறையுளும்
உதட்டில் உறவும் உள்ளே பகையும் உடையவர்
உதட்டில் நகையும் (சிரிப்பும்) உள்ளத்தில் வஞ்சமும் உடையவர்
உதப்பிக் குதப்பிக்கொண்டு வெற்றிலை மெல்லுதல்
உதவியும் ஒத்துழைப்பும் நல்கல்
உந்தித்தள்ளுதல்
உப்பிற்குங் காடிக்குங் கூற்று (குறள்)
உப்புச் சப்பற்ற கதை
உப்புச்சப்பில்லாத பேச்சு
உபகாரம் செய்தோர்க்கு அபகாரம் செய்தல்
உயர்ந்தோங்கி நிற்றல்; வளர்தல்
உயர்வு தாழ்வு பாராட்டாதவர்
உயிர் ஒடுங்கி உடல் நடுங்கி வருந்துதல்
உயிர் கலந்து ஒன்றிய தொன்றுபடு நட்பு (அகம் 205)

உயிர் கொடுத்து உணர்ச்சி யூட்டல்
உயிர்க்குயிராக வளர்த்தல்
உயிர்த்துடிப்பும் ஓட்டமும் உள்ள நடை, நூல்
உயிரும் உடலும்போல ஒன்றியிருத்தல்
உயிரோடு பிறந்து உடலோடு வளர்ந்த இலட்சியம்
உரிமையும் கடமையும் உணராதவர்
உருக்கமும் உணர்ச்சியும் கலந்தபாடல்
உருக்குலைந்து சீரழிந்து போதல்
உருகி உடல் கருகி உள்ளீரல் பற்றிவிடும் காதல்
உருகி உருகி நெக்குள் உடைதல்
(மனம்) உருகிக் கசிந்து நெக்கு நெக்குள் உடைந்து (குமர)
உருகியுருகி நெக்குநெக்குள் உடைந்து கசிந்திட்டு அசும்பூறும் உழுவல் அன்பிற் பழவடியார் (குமர 45)
உருகுபேர் உவகைவெள்ளம் உவட்டெடுத்து ஒழுக (கூர்மபு 21-106)
உருட்டலும் மிரட்டலும் இங்கே நடக்காது
உருட்டித் திரட்டி உண்ணுதல்
உருட்டிப் புரட்டிப் பார்த்தல்
உருட்டி மிரட்டிப் பார்த்தல்
உருட்டுப் புரட்டு ஒன்றும் செய்யாதவன் (உருட்டுப் புரட்டு—வஞ்சகம், ஏய்ப்பு)
உருட்டும் புரட்டும் செய்தல் - வஞ்சகம் செய்தல்
உருண்டு திரண்டிருக்கும் உருளைக்கிழங்கு
உருண்டு திரண்டு பருத்த உடல்
உருண்டு புரண்டுகொண்டு செல்லுதல், ஓடுதல்
உருண்டும் புரண்டும் குதித்தும் கொந்தளித்தும் குமிழி யிட்டுக்கொண்டும் செல்லும் ஆறு

உருவத்தால் இருவராகி உள்ளத்தால் ஒருவராதல் (சூளா 1112)

உருவுக்கு எழில்மெருகு பூசிய பருவம்

உருவுந் திருவுங் குலமுங் குணமும் ஒத்த தம்பதிகள்

உருவும் அருவும் உருவருவுமான இறைவன்

உருவும் இளமையும் ஒண்பொருளும் உடையவள்

உருவும் திருவும் ஒத்த காதலர்

உருவும் திருவும் பொருந்திய காதலர் ; மணமக்கள்

உரைகள் எல்லாம் உணர்வெய்தி நல்ல உத்தமராய் உணர்ந்தார் (ச. 5-3)

உரையிறந்த உவகைப் பெருங்கடல் (இரட்ச 21-453)

உலகத்தோடு ஒட்டி ஒழுகுதல்

உலவாப் பெருங்குணத்து உத்தமன் - இறைவன் (கம்ப 3-2-29)

உலுக்கிக் குலுக்குதல்

உவகை தந்து ஊக்கம் அளித்தல்

உவகையும் உற்சாகமும் நிறைந்த உள்ளம்

உவந்து இன்புறல்

உவந்து உயர்ந்து ஓங்கும் நெஞ்சினர் (கம்ப 4-14-15)

உவர்ப்பும் துவர்ப்பும் உடைய பதார்த்தங்கள்

உவரிசூழ் உலக வைப்பு (காஞ்சிப் 2-125)

உழுது பயிர் செய்யும் உழவர்

உழைத்து உழைத்து உடம்பு ஓடாய்ப்போதல்

உழைத்துக் களைத்தல்

உழைத்து உழைத்து உருக்குலைந்து போதல்

உழைப்பின்வாரா உறுதிகள் உளவோ?

உழைப்புக்குத்தக்க ஊதியம் வேண்டும்

உள்மகிழ் உவகை (பெருங் 5-7-3)

உள்ளெலாம் உவந்து ஈயும் வள்ளியோர் (கம்ப 1-1-4)

உள்ளக்குறிப்பைத் தெள்ளிதின் உணர்தல்
உள்ளங்கசிந்து நெக்குநைந்து கரைந்து உருகல் (திருவா 105)
உள்ளங்கவர்ந்து எழுந்து ஓங்கு சினம் (நன்னெறி 8)
உள்ளங்காலிலிருந்து உச்சந்தலைவரை
உள்ளங் குழைந்து உருகுதல் (பஞ்ச. வனவாசம் 4)
உள்ளது உரியதெல்லாம் விற்றுவிடல்
உள்ளதை உள்ளபடி சொல்லுதல்
உள்ளதைக்கொண்டு நல்லதைப் பண்ணுதல்
உள்ளம் பூரித்தேன், உடலம் பாரித்தேன் (பிரதாப அதி 46)
உள்ளம் மகிழ்ச்சியால் துள்ளுதல்
உள்ளம் நைந்து உருகி
உள்ளமும் உடலும் பூரித்தல்
உள்ளமுருக்கும் ஒள்ளமர்க்கிளவி (பெருங்க நரவாண 5-32)
உள்ளனும் கள்ளனுமாய் இருப்பவன் (பழ) (உள்ளன்-உளவன்)
உள்ளானுங் கள்ளானுமாய் இருப்பவன் – இருபுறத்துக்குமிணங்கிக் கள்ளமாய் நிற்பவன், உளவன்
உள்ளும் புறமுங்கசிந்து ஊற்றெழ நெக்கு உடைதல் (குமர 141)
உள்ளும் புறமும் (புறம்பும்) ஒத்திரு
உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல் (குறள் 596)
உள்ளுள் உவந்து உள்ளுதல் (கலித் 118)
உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாதே
உளங்கனிந்து உருகுதல்; உருகிப் பாடுதல்
உளறிக் குழறிப் (குளறிப்) பேசுதல்

உற்சாகமும் ஊக்கமும்; எழுச்சியும்; சுறுசுறுப்பும் (உடையவர்)

உற்சாகமும் குதூகலமும் அடைதல் (கல்கி)

உற்றம் சுற்றங்களுக்கு உதவுதல்

உற்றார் உறவினர் - உறவின்முறையார், இனஞ்சனம்

உற்றார் உறவின்முறையார் எல்லோரும் (இராமப் அம்ப 12)

உற்றார் ஊரார் அறிய மணம் செய்தல்

உற்றார் பெற்றார்க்கு உதவுதல்

உற்றார் பெற்றார் மனைவி மக்கள்

உற்றாரும் மற்றாரும் போற்ற வாழ்தல்

உற்றுணர்ந்து உருகி ஊறி உள்கசிவுடைய பத்தர் (அப் 70-1)

உற்றுநோக்கி ஊகித்தறிதல்

உற்றார்மகிழ மற்றோர் புகழ வாழ்தல்

உறுதி குன்றாது ஊக்கம் தளராது

உறுதியாகவும் தெளிவாகவும் எடுத்துரைத்தல்

ஊக்கம் உடையோர்க்கு ஆக்கம் உண்டாகும்

ஊக்கம் குன்றி ஏக்கங்கொண்டிருக்கும்

ஊக்கமும் உதவியும் அளித்தல்

ஊக்கமும் உழைப்பும் உடையவர்

ஊக்கமும் உள்ளக் கிளர்ச்சியும் உடையவர்

ஊக்கமும் உற்சாகமும் உடையவர்; கொண்டிருத்தல்; ஏற்படுத்தல்

ஊக்கமும் முயற்சியும் பாராட்டத்தக்கன

ஊக்கமும் வலிவும் வேட்கையும் விழைவும் உடையோர் (பெருங்க 4-2-26)

ஊடலும் கூடலும் உடையதே மனைவாழ்க்கை

ஊடுருவித் துளைத்தல்

ஊண் உடை சிறக்க வேண்டும்
ஊண் உறக்கம் இன்றி உழைத்தல்
ஊண் ஒடுங்க வீண் ஒடுங்கும் (பழ)
ஊணும் உறக்கமும் இன்றி உயங்குதல்
ஊணுறக்கமின்றி அயராதுழைத்தல்
ஊதி உதித்துப் போதல்-உடல் மிகப் பருத்துப்போதல்
ஊதியமும் இழப்பும் வாணிகத்தில் சகஜம்
ஊர் பேர் தெரியாதவர்
ஊரார் உடைமைக்குப் பேராசை கொள்ளல்
ஊருக்கு உழைக்கும் உத்தமர்
ஊருக்குழைத்து ஊதாரியாய்ப் பிழைத்தல்
ஊரும் பேரும் கேட்டறிதல்
ஊழல்களும் ஊதாரித்தனங்களும் மலிந்த
ஊற்று மணல்போல் நெக்குநெக்கு உள்ளே உருகி
ஓலமிடல் (திருவா 437)
ஊற்று மணலென நெக்குநெக்கேங்கி உருகுநர் (கழுக்
கோ 72)
ஊற்றெடுத்துப் பெருகுதல்
ஊறப்போட்டுத் தோய்த்தெடுத்தல்
ஊறித் திளைத்தல்
ஊனமானமில்லாதவன் - உரோசம் மானமில்லாதவன்
ஊனும் உயிரும் உருகப் பாடுதல்
எக்கச் சக்கம் - இசகு பிசகு
எக்கச்சக்கமாக மாட்டிக் கொள்ளுதல்
எக்காளமும் எடாசியுமாய் (- பரிகாசமாய்)ப் பேசுதல்
எகனைமொகனை - எதுகைமோனை
எச்சசொச்சம் இல்லாமல் தீர்த்துவிடுதல்
எச்சமிச்சம் ஏதாவது உண்டா

எச்சுமிச்சம் இல்லாமல் (சிறிதும் மீதி இல்லாமல் உண்டுவிடல்
எசகு பிசகு - இசகு பிசகு
எஞ்சியதை மிஞ்சியதை எடுத்துக்கொள்
எட்டாப் பழத்திற்குக் கொட்டாவி விடல்
எட்டிக் காய்போல் கட்டக் கசப்பான
எட்டேணி வைத்தாலும் எட்டாத உயரம்
எடுக்க, இன்றேல் விடுக்க
எடுத்த காரியத்தைத் தொடுத்து முடித்தல்
எடுத்த காரியம் இடையூறின்றி இனிது முடிதல்
எடுத்துத் தொடுத்தல் - கட்டிப்பேசல், வழக்குப் பிணைத்தல், மாலைகட்டல், இலதையுளதாகக் கூறல்
எடுத்தும் படுத்தும் சொற்களை உச்சரித்தல்
எண்ண எண்ணத் தெவிட்டாத இன்ப அமுது (இள முலை. பி. த. 6-7)
எண்ணத் தொலையாது ஏட்டில் அடங்காது
எண்ணத் தொலையாது ஏடிடங்கொள்ளாது
எண்ணறக்கற்று எழுத்தற வாசித்தல்
எண்ணாத எண்ணமெலாம் எண்ணி நெஞ்சம் புண்ணாதல்
எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி மனத்தைப் புண்ணாக்கிக் கொள்ளல்
எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி ஏங்குதல்
எண்ணாத எண்ணி இடைந்திடைந்து ஏங்கியிருந்து மனம் புண்ணாய் மெலிந்து புலம்பல்
எண்ணாததெல்லாம் எண்ணி நெஞ்சு புண்ணாதல்
எண்ணிய கருத்துக்களைத் திண்ணிதின் எடுத்தியம்பல்
எண்ணிய காரியம் திண்ணமாய் முடிக்கும்
எண்ணுக்கு எட்டா இறைவன்

எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்

எத்தன் ஏமாற்றுக்காரன்

எதிர்குதிர் ஆகிநின்று எதிர்ப்பு (பரிபா 8-21) (எதிர்குதிர் - மறுதலை)

எதிர்த்துத் தாக்குதல் ; போராடுதல்

எதிர்ப்பும் மறுப்பும் எழுப்பல்

எதிரும் புதிருமாக இருத்தல் - எதிரெதிராக இருத்தல்

எதையும் தாங்கும் இதயம் வேண்டும் ; படைத்தவர்

எந்த வம்பு தும்புகளுக்கும் போகாதவன்

எய்த்துக் களைத்துச் சோர்ந்துபோதல் (ரகுநாதன்)

எய்ப்பில் வைப்பு - சேமநிதி

எய்படை எறிபடை ( - அஸ்திர சஸ்திரம்) கொண்டு போரிடல்

எரிந்து கரியாதல்

எரிந்து பொசுங்கிச் சாம்பராய்ப் போதல் (கல்கி)

எரிபொரி என்று எரிந்து விழுதல்

எருக்கும் குருக்கும் முளைத்த இடம்

எருமையைவிடப் பொறுமையுள்ளவன்

எல்லாம் வல்ல இறைவன்

எல்லாமாய் அல்லதுமாய் இருக்கும் இறைவன்

எல்லார்க்கும் நல்லவனாய் வாழ்தல்

எல்லையில்லாத தொல்லை விளைவித்தல்

எலும்புந் தோலுமாக மெலிந்திருத்தல்

எவ்வங் கூர்ந்த ஏமுறு துயரம் (நற் 273)

எவ்வுயிருந் தம்முயிர்போலப் பாதுகாத்தல்

எழில் ஒழுக அமுதமொழி பேசும் (இளமடந்தை)

எழில் ஒழுகும் (கொழிக்கும்) அழகுத் திருமுகம்

எழில் குலுங்கும் செழிப்பு

எழிலும் இனிமையும் நிறைந்த

எழுச்சியும் உணர்ச்சியும் ஊட்டுதல் (நெடுஞ்செழி)
எழுச்சியும் மகிழ்ச்சியும் அளிக்கத்தக்க
எழுச்சியும் விழிப்பும் ஏற்பட்டிருத்தல்
எழுதப் படிக்கத் தெரியாதவன்
எழுதெழில் சிதைய அழுதகண் (நற் 379)
எழுப்பிக் கிளப்பிவிடு
எழுமையும் வழுவாத உழுவலன்பு
எள்ளலும் ஏச்சும் பெறல்
எள்ளற்கரிய உள்ளற்குரிய வள்ளிக்கிரியின் இறைவன் (தண்டிகைக்க. பள் 99)
எள்ளி நகையாடுதல்
எள்ளிப் பழித்து இழித்துரைத்தல்
எள்ளியும் இகழ்ந்தும் பழித்தும்
எளிமையும் இனிமையும் கலந்த சொற்பொழிவு; உரைநடை
எளிமையும் எழிலும் கெழுமிய
எளிமையும் ஏழ்மையும் (சூழ்ந்த)
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் (திருப்பாவை 29)
என்புநைந்து உருகிநெக்கு நெக்கேங்குதல் (திருவா 4-80)
என்றும் உளதென்றமிழ் இயம்பி இசைகொண்டான் - அகத்தியர் (கம்ப 3-3-47)
என்றும் நின்று குன்றுதுலவும்
என்றும் நின்று நிலவிவரும்
என்றென்றைக்கும் – என்றைக்கும்
என்னஆச்சோ ஏதுஆச்சோ என்று கவலைப்படல்
என்ன ஏது என்று விசாரித்தல்
என்ன நேருமோ ஏது நேருமோ என்று பயப்படல்

என்னமோ ஏதோ என்று எண்ணிப் பயப்படல்; கவலைப் படல் ; பிரமித்துப் போதல் (கல்கி)

ஏக்கத்தினால் ஊக்கம் இழந்திருத்தல்

ஏக்கம் பிடித்து அயர்ந்து தூக்கமின்றி இருத்தல்

ஏக்கமும் ஏமாற்றமும் அடைதல்

ஏக்கன் போக்கன்(கி) - ஒன்றுக்குமுதவாதவன்(ள்)

ஏக்கி போக்கி - ஒன்றுமுதவாதவன்(ள்)

ஏக்கிரி போக்கிரி

ஏகபோக உரிமையாக அனுபவித்தல்

ஏங்கி ஏங்கி வீங்கிச் சாவு

ஏங்கி இளைத்துத் திகைத்து மனம்வீங்கி விம்மி விழுதல் (கம்ப 2-4-8)

ஏங்கி எதிர்நோக்கி நிற்றல் (வைண 2-10)

ஏங்கித் தவித்தல் ; தவித்துப் புலம்புதல் ; துடித்தல்

ஏங்கித் திகைத்துப் பதைத்துக் கலங்கிட இடர்தாங்கிப் புலம்பல்

ஏங்கித் தேங்கித் தவித்தல்

ஏங்கிப் புலம்புதல்

ஏச்சிலும் பேச்சிலும் வல்லவன் (பழ)

ஏச்சுக்கும் ஏளனத்துக்கும் ஆளாதல்

ஏச்சுக்கும் பேச்சுக்கும் இடமில்லாமல் (இடம் வைக்காமல்) நடந்துகொள்ளல்

ஏச்சும் பேச்சும் கேட்டல்

ஏச்சையும் எதிர்ப்பையும் சமாளித்தல்

ஏசி நகைசெய்து இகழ்தல் (வில்லி 3-43)

ஏட்டிக்குப் போட்டி - எதிருக்கெதிர்; விதண்டாவாதம்

ஏட்டிக்குப் போட்டியாக இடங்காடுசெய்தல்

ஏடாகூடம் - தாறுமாறு ; அலங்கோலம்

ஏடாகோடமான - தாறுமாறான

ஏடும் எழுத்தாணியும்
ஏண்கோண் - கோணல்மாணல்
ஏணல் கோணல் - தாறுமாறு, வளைவு, ஒழுங்கின்மை
ஏணுக்கோண் - உதிரிடையான பேச்சு, ஏட்டிக்குப் போட்டி, ஏறுமாறு
ஏணுக்குக்கோண் பேசுதல் - எதிர்த்துப் பேசுதல், எதிரிடையாகப் பேசுதல்
ஏணைக்குக்கோணை பேசுதல், செய்தல் - ஏட்டிக்குப் போட்டி பேசுதல், செய்தல்
ஏத்திப் பாராட்டுதல்
ஏதம் செய்தவர் கேதம் படுவர்
ஏதுமறியாப் பாமரமக்கள்
ஏப்பை சாப்பை - உபயோகமற்றது, சாரமற்றது
ஏப்பை சாப்பையான ஆள் அல்ல
ஏமத்தில் சாமத்தில் எல்லாம் எழுந்திருத்தல்
ஏமம் சாமம் எந்நேரத்திலும்
ஏமம் சாமம் என்றில்லாமல் போதல்
ஏமமும் சாமமும் கூத்தாடுவோர்
ஏமாளியாக்கிய எத்தர்கள்
ஏமாற்றத்தோடும் ஏக்கத்தோடும் முகத்தைத் திருப்பிக் கொள்ளல்
ஏமாற்றமும் எரிச்சலும் அடைதல்
ஏமாற்றமும் வருத்தமும் அளித்தல்
ஏமாறுமல் எச்சரிக்கையாய் இருத்தல்
ஏராளமாயும் தாராளமாயும் கிடத்தல்
ஏரி குளங்களில் நீர் நிறைந்திருத்தல்
ஏவல் கேட்குங் காவலர் (பெருங்க 4-1-43)
ஏவல் மேவல் - ஏவல்தொழிலும் உள்வேலையும்

ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னிசையாய் இருக்கும் இறைவன்

ஏழை எளியவர்களுக்கு இரங்குதல்

ஏழைபாழைகள் - ஏழைகள்

ஏழைபாழைகளை வயிற்றிலடித்து வாயில் மண்ணைப் போடல்

ஏழையைக் கண்டால் மோழையும் பாயும் (பழ)

ஏற்பும் வாய்ப்புமின்றித் தாறுமாறாகப் பேசல் (அப் பாத்)

ஏற்றக்குறைச்சல் - ஏற்றத்தாழ்ச்சி

ஏற்றத் தாழ்வுகளை (தாழ்ச்சிகளை) நீக்குதல்

ஏற்றம் இறக்கம் மேடுபள்ளம் (எல்லாம் பெற்றதே வாழ்க்கை)

ஏற்றமும் இழிவும்

ஏற்றமும் தோற்றமும் உடையோன் (வில்லி 10-16)

ஏற்றியும் போற்றியும் புகழ்ந்துரைத்தல்

ஏற்றுப் போற்றுதல்

ஏற்றோர்க்கு இல்லையென்னாது இயைந்தமட்டும் ஈதல்

ஏற இறங்கப் பார்த்தல்

ஏறக்குறைய - கிட்டத்தட்ட

ஏறுக்குமாறு பேசுதல்

ஏறுங்கூறுமாய்க் கிடத்தல் - தாறுமாறாய்க் கிடத்தல், குழப்பமாய்க் கிடத்தல்

ஏறுமாறு - தாறுமாறு, குளறுபடி, குழப்பம்

ஏன் எதற்காக என்று கேட்டல்

ஏனபானம் - தட்டுமுட்டு, பாத்திரபண்டம்

ஏனோதானோ என்றிருத்தல் - அசட்டையாயிருத்தல்

ஐசாபைசா இல்லாமல் கணக்குத் தீர்த்துவிடல்

ஐசாபைசாவாய்ச் சொல்லல் - முடிவாகச் சொல்லல்

ஐது நொய்தாக இருத்தல் மிக லேசாக இருத்தல்
ஐந்தரு நிழற்கீழ் அரசு வீற்றிருக்கும் இந்திரன் (குமர 570)
ஐயந்திரிபற அறிந்து கொள்ளுதல்; கற்றல்
ஐயமும் அச்சமும் அடைதல்
ஐயோ அப்பா என்று அலறித் துடித்தல்
ஐயோ என்று அழுது புலம்புதல்
ஐயோடி அப்பாடி என்று கத்துதல் (கல்கி)
ஒசிந்து ஒல்கியிருக்கும் கொடி
ஒட்டி உலர்ந்த கன்னங்கள்
ஒட்டி உலர்ந்த உட்குழிந்த வயிறுகள் (ரகுநாதன்)
ஒட்டி உறவாடிப் பழகுதல்
ஒட்டிக்கு இரட்டி
ஒட்டி நின்று உறவாடல்
ஒட்டிய வயிறும் உலர்ந்த உதடுமாய் இருத்தல்
ஒட்டு உறவு அற்றுப் போதல்
ஒட்டுப்பற்று இல்லாதவன் - ஆசாபாசம் இல்லாதவன்
ஒட்டும் உறவும் விட்டுப் போதல்
ஒட்டுமில்லை உறவுமில்லை
ஒட்டு மொத்தம்—முழு மொத்தம்
ஒட்டுறவாய் இருத்தல்
ஒட்ப நுட்பங்களை ஓர்ந்தாய்ந்தும் உய்த்துணர்ந்தும் அறிதல்
ஒடுக்க வணக்கம்—அடங்கி வழிபடல்
ஒடுக்கமாகவும் அடக்கமாகவும் நிற்றல்
ஒடுங்கிச் சுருங்கிய வயிறு
ஒடுங்கி முடங்கிய உடல்
ஒடுங்கு நுண்மருங்குல் (சிறுபாண் 135)
ஒண்டிசண்டியாய்க் காட்டுவழி போதல்

ஒதுக்குப்பொதுக்குப் பண்ணுதல்—பண மோசம் பண்ணல், சொத்தை மறைத்து வைத்தல்

ஒதுங்கிப் பதுங்கி யிருத்தல்

ஒதுங்கியும் பதுங்கியும் நடத்தல்

ஒப்ப செப்பம்—சமம்

ஒப்பாரும் உயர்ந்தாரும் இல்லை

ஒப்பாரும் மிக்காரும் இல்லா ஒளிவிளக்கு (நம்மாழ்வார் தாலாட்டு 116)

ஒப்பு உவமை இல்லாத

ஒப்புக்குச் சப்புக் கொட்டுதல் – மனமின்றிச் செய்தல்

ஒப்புக்கொப்பாரம்—விருந்தினரை உபசரித்தல்

ஒப்புயர்வு அற்ற—ஈடிணையற்ற

ஒருநாளுமில்லாத திருநாளா யிருக்கிறது

ஒருபுறமாக ஒதுங்கி யிருத்தல்

ஒரே கூட்டமும் சந்தடியுமா யிருத்தல் (கல்கி)

ஒல்காப்புலமைத் தொல்காப்பியனார்

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்பெரும் பழங்கொடி (பாரதிதா)

ஒல்கி நுடங்கிய இடை

ஒல்லென்று ஒலிக்கும் ஒலிபுனலூரன் (ஐந்திணை 50-28)

ஒல்லென ஒலித்து மெல்லெனப் பாயும் ஓடைநீர்

ஒலி ஆர்கடல்சூழ் உலகம் (கம்ப 2-4-62)

ஒலிமென் கூந்தல் ஒண்ணுறுதல் அரிவை (புறம் 306)

ஒழுக்கம் நிறைந்த விழுப்பெருங் கேள்வி மெய்த் தவர் (குமர 458)

ஒழுக்கம் விழுப்பந்தரும்

ஒழுக்கமும் பண்பாடும் உடையவர்

ஒழுக்க வழக்கங்கள்

ஒழுகிய ஓசையும் விழுமிய பொருளும் கெழுமிய பாட்டு

ஒழுங்காகவும் நிதானமாகவும் மூச்சுவிடல்
ஒழுங்கும் கட்டுப்பாடும் உள்ள
ஒழுங்கையும் அமைதியையும் நிலைநாட்டல்
ஒழித்தது பழித்த நெஞ்சம் (அகம் 39)
ஒழித்தழித்தல்
ஒளிதரும் பெருவிளக்கு
ஒளிப்பதோ மறைப்பதோ இன்றி
ஒளியும் அருள் அளியும் உள்ளக்களியுமிக உடைய சிவ பிரான் (அருட்கவி)
ஒளிவிட்டுச் சுடரும்
ஒளிவின்றி நெருங்க நிறைந்திருத்தல்
ஒளிவு மறைவு இல்லாத
ஒளிவு மறைவு இன்றிப் பேசுதல்
ஒற்றுமையும் ஒத்துழைப்பும் உடையோர்
ஒற்றுமையும் ஒருமைப்பாடும் நிலவுதல்
ஒறுத்தலினும் பொறுத்தல் உயர்ந்தது
ஒன்றடி மன்றடி—குழப்பம், தாப தடுமாற்றம்
ஒன்றாய்க் கலந்து உறவாடல்
ஒன்றாய் மன்றாய்க் (வேறுபாடின்றிக் கலந்து) குடியிரு
ஒன்று ஊக்கி ஒன்று இழத்தல் உணர்வு உடைமைக்கு உரித்தன்று (கம்ப 5-2-219)
ஒன்றும் பேசாது சென்று விடுதல்
ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
ஓங்குயர் பெருஞ்சிறப்பு உடைய (மணி 14-54)
ஓங்கி உயர்ந்து வளர்ந்த மரம்
ஓட்டை சாட்டை (-உபயோகமற்றது) இருந்தால் கொடு
(நகர மக்களின்) ஓட்டசாட்டங்களுக்கு அப்பால் (சோமு-மன்மத)
ஓட்டமாய் ஓடுதல்

ஓட்டமும் நடையுமாகச் செல்லுதல்

ஓட்டமும் பெருநடையுமாய் ஓடிவரல்

ஓட்டை உடைசல் விரிசல் இல்லாத பாத்திரம்

ஓட்டை சாட்டையான - உபயோகமற்ற

ஓட்டையுடைசல்—உடைந்த பாண்டங்கள்; பயனற்ற பொருள்கள்

ஓட்டோட்டமாக வோடுதல்

ஓடி ஒதுங்கு

ஓடி ஓடிப் பாடுபடல்

ஓடித்திரிந்து உழல்தல்

ஓடியாடி விளையாடுதல்; திரிதல்

ஓதாது உணர்ந்த போதன் (பெ. தொகை 1947)

ஓதி உணர்ந்து பின் ஊருக்கு எடுத்துரைப்பவர்

ஓய்ச்சல் ஒழிச்சல் இல்லாமல் பாடுபடல்

ஓய்ச்சல் ஒழிவு (கல்கி-அலை)

ஓய்ச்சலுமில்லை ஒழிவுமில்லை

ஓய்வு ஒழிவு இன்றி உழைத்தல்

ஓய்வு சாய்வு இல்லாதவன்

ஓய்வும் உறக்கமும் இன்றி

ஓயாத ஒழியாத சண்டை

ஓயாமல் ஒழியாமல் உழைப்பவர்; வந்துகொண்டிருத்தல்

ஓர்ந்து ஆராய்தல்

ஓலமும் அரற்றலும்

கக்கல் கரைசல்—கலங்கல் நீர்

கக்கலுங் கழிச்சலும்—வாந்தியும் பேதியும்

கக்கலும் விக்கலுமா யிருக்கும் பயிர்—கதிர் ஈன்றதும் ஈனாததுமா யிருக்கும் பயிர்

கங்குகரை காணாத கடல்

கங்கு கரையில்லாமல்—அளவில்லாமல்
கங்குங் கரையுமறப் பெருகும் நீர்
கங்குலும் பகலும் (—இரவும் பகலும்) உழைத்தல்
கங்கை என்னும் கடவுள் திருநதி (கம்ப 2-7-10)
கங்கை காவிரிகளில் நீராடல்
கச்சிதமாகவும் கவர்ச்சியாகவும் வாசித்தல்
கச்சேரி கரைவாசல்—உத்தியோக முதலிய வேலை பார்க்குமிடம்
கசக்கிப் பிழிதல்—மிகுதியாக வேலை வாங்குதல்
கசங்கி நசுங்கிப் போதல்
கசடறக் கற்றல்
கசப்போடும் வெறுப்போடும் அளித்தல்
கஞ்சப் பிசுநாறி - பெரும் உலோபி
கஞ்சி தண்ணீர் ஒன்றும் குடிக்காமல் காரியம் செய்தல்
கட்டக் கசப்பு - கடுங் கசப்பு
கட்டங் கறுப்பான மேனி
கட்டங்கறையேனென்றிருத்தல்-மிகக் கறுப்பாக இருத்தல்
கட்ட நிட்டூரங்களைப் பொறுத்துக்கொள்ளல்
கட்டழகுடைய காளை
கட்டி அணைத்துக் கொள்ளல்
கட்டிக் காத்து வளர்த்து வருதல்
கட்டிக் காப்பாற்றுதல்
கட்டிக்கொண்டு கண்ணீர் மல்கக் கதறல்
கட்டித்தழுவி அணைத்துக் கொள்ளல்
கட்டித்தழுவி உச்சிமோந்து கண்ணீர்விட்டு மகிழ்தல்
கட்டிமுட்டிகள் - சிறியவும் பெரியவுமான கட்டிகள்
கட்டியணைத்து முத்தமிடல்
கட்டியும் முட்டியுமாய் உழுது போடல்

கட்டிளங் காளைப் பருவம்

கட்டிவைத்த பணத்தைத் தட்டிப்பறித்தாற்போல் (பழ)

கட்டுக் கடங்காப் பிடாரி

கட்டுக் குட்டான உடல் - கட்டுள்ள உடல்

கட்டுங்கனமுமா யிருந்தால் - உறவினரா யிருந்தால்

கட்டுங் காவலுமா யிருத்தல் - பெருங்காவலுடையதா யிருத்தல்

கட்டு செட்டாய் குடித்தனம் நடத்துதல்

கட்டுண்டு மயங்கிக் கிடத்தல்

கட்டுத் திட்டம் பண்ணுதல் - செய்வதிதுவென விதித்தல்

கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு நடத்தல்

கட்டுப்பாடில்லாமல் கெட்டழிதல்

கட்டும் காவலும் இல்லாது விடப்படல்

கட்டும் திட்டமும் அமைந்த உரை நடை நூல்

கட்டுமட்டு (- அளவு) இல்லாமல் செலவிடல்

கட்டை குட்டையாக இருந்த மனிதர் (கல்கி)

கட்டையாயும், குட்டையாயும் இருப்பவன் (கல்கி)

கட்டோடே கனத்தோடே வாழ்தல் - உறவினரோடு வாழ்தல் (அருட்பா)

கடக்கு முடக்கு என்று கட்டைவண்டி போதல்

கடகடத்த ஓட்டை உடைசல் வண்டி (கல்கி)

கடகடெனப் புரண்டு உருண்டோடுதல்

கடம்படு களிறல் யானை (காஞ்சிப் 2-31)

கடமை கண்ணியம் கட்டுப்பாடு

கடமைகளும் உரிமைகளும் பொறுப்புக்களும் உணர்ந்தவர்

கடல்மடை திறந்தாற்போல் கவிபாட வல்லவர்

கடவுள் காட்டுவார், ஊட்டுவாரா ?

கடவுள் மீன் கற்பு மாதர் (காசிகண் 2-28)
கடன்வாங்கிக் கடன்வாங்கி உடலைத் தேற்றுதல்
கடாம்பொழி கரடக் களி நல்யானை (குமர 528-5)
கடாவிடைகளால் விஷயத்தை விளக்குதல்
கடித்துக் கொறித்துத் தின்னுதல்
கடிந்து கண்டித்துரைத்தல்
கடுகடுப்பாகவும் வெடு வெடுப்பாகவும் பேசுதல்
கடுகி முடுகிக் காரியஞ் செய்தல்
கடுப்பாயும் வெடுப்பாயும் பேசுதல்
கடுப்போ வெடுப்போ கொள்ளாதவன்
கடுவரற் கலுழிக் கட்கின் சேயாறு (மலைபடு 555)
கடை கண்ணிக்குப் போய்வரல் - கடைவீதிக்குப் போய் வரல்
கடைசல் குடைசல் வேலை - மரவேலை
கடைந்தெடுத்த கழிபெருமடையன்
கண்களி கொள்ளுங் காட்சி (சிலப் 26-73)
கண்களில் தீப்பொறி பறக்க, புருவம்நெரிய, உதடுகள் துடிக்கப் பார்த்தல்
கண்களுக்கு நிறைந்த கட்டழகன்
கண்கவர் கவின்பெறு கட்டடம்
கண்காணித்துக் கவனித்து வருதல்
கண்காது தெரியாமல் அடித்தல் - கண்மூடித்தனமாக அடித்தல்
கண்கெட்டுக் கருத்தழிந்து கலங்குதல்
கண்கொள்ளாக் கவின் பொழிந்த கட்டழகுத் திருமேனி
கண் சிமிட்டிக் கண்சாடை செய்தல்
கண்சிவந்து சீறிக் கடுங்கோபங் கொண்டெழுதல் (இராமப். அம். ப. 30)
கண்செய் கூந்தல் களிமயில் (குமர 349-11)

கண்டது கற்கப் பண்டிதனாவான்
கண்டதுண்டப் படுத்தல் - வெட்டுதல்
கண்டதுண்டமாக வெட்டுதல் - பல துண்டுகளாக வெட்டுதல்
கண்டதும் கடியதும் - நல்லதும் தீயதும்
கண்டதையும் கடியதையும் தின்னல்
கண்டனை தண்டனை செய்தல் - வைது ஒறுத்தல் (பிரதாப அதி 1)
கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்
கண்டவன் கடியவன் எல்லாம் பந்தியில் அமர்தல்
கண்டார்தம் கண்ணும் கருத்தும் கவர்தல் (வைண 2-29)
கண்டாரைக் கொல்லும் கட்டழகு
கண்டான் முண்டான் சாமான்கள் - பயனில்லாதவை (நாடோடி)
கண்டானும் முண்டானும் - வீட்டுத் தட்டுமுட்டுச் சாமான்கள்
கண்டோர் கண்களையும் கருத்தையும் கட்டுகின்ற அழகு (இராமலிங்கசு)
கண்டித்துத் திருத்துதல்
கண்டிக்கவேண்டும் அல்லது தண்டிக்கவேண்டும்
கண்டு கேட்டு உண்டு உடுத்து உற்றறியும் ஐம்புலன்கள் (குறள் 1101)
கண்டு பாகு தேன் எனக் கவித்திறங்கள் பாடி (திருவாவி. பதிற். அந். 16)
கண்டும் கேட்டும் அறியாத; களிக்கும் பேறுபெறல்
கண்ணா! மணி வண்ணா!
கண்ணான பேரையெல்லாம் புண்ணாக்கிக் கொள்ளல்
கண்ணான மனதைப் புண்ணாக்கிவிடல்

கண்ணினைக் களிப்புறுங் கடிகொள் காவனம் (இரட்ச 21-87)

கண்ணிமை போலக் கரிசனமாய்க் காத்தல்

கண்ணியமாகவும் கட்டுப்பாடாகவும் நடந்துகொளல்

கண்ணியமாகவும் மரியாதையாகவும் நடத்(து)தல்

கண்ணில்லாத கபோதி

கண்ணிலும் கருத்திலும் கலந்த காதல்

கண்ணிழந்தீரோ கருத்திழந்தீரோ (பாரதிதா.)

கண்ணிற்கணிகலம் கண்ணோட்டம் (குறள் 575)

கண்ணிற் காணுமாறு வைத்தல் - அருகிலேயே வைத்தல்

கண்ணினைக் காக்கின்ற இமையின் காத்தல் (கம்ப 1-8-70)

கண்ணீர் கலுழ்ந்து உகுத்தல் (சிந் 294)

கண்ணீர் சொரிந்து கதறியழுதல்

கண்ணீர் சோரக் கதறி நிற்கும்

கண்ணீர் வடித்துக் கதறுவோர்

கண்ணீர்விட்டுக் கதறியழுதல்

கண்ணீர்விட்டுக் கதறியழுது புரண்டு விம்மி வெதும்பிப் பெருமூச்சுவிடல் (மனுமுறை)

கண்ணீர்விட்டுக் கலங்கிக் கதறுதல்

கண்ணீருங் கம்பலையுமாய்க் காட்சியளித்தல்

கண்ணீரைப் பெருக்கிக் கதறுதல்

கண்ணுக்குக் கண்ணாகவும் உயிருக்கு உயிராகவும் இருத்தல்

கண்ணுக்குக் கண்ணாகவும் பிராணனுக்குப் பிராணனாகவும் வளர்த்தல் (பிரதாப அதி 5)

கண்ணுக்குக் கண்ணான கண்மணி

கண்ணுக்குக் கண்ணான செல்லப்பிள்ளை

கண்ணுக்கும் கருத்துக்கும் அரிய காட்சி
கண்ணுங் கண்ணீருமாகக் கட்டித் தழுவிக்கொண்டு
கண்ணுங் கண்ணீருமாய்க் காலங் கழித்தல் (கல்கி)
கண்ணுங் கருத்துமாய்க் கவனித்துப் போற்றுதல்
கண்ணுமண்ணுத் தெரியாமல் (கண்மூடித்தனமாக) அடித்தல்
கண்ணே கண்மணியே கண்ணுறங்காய்
கண்ணைக் கவர்ந்து ஒளிருங் கட்டழகி
கண்ணைக் கவர்ந்து கருத்தைப் பிணித்தல்
கண்ணைக் கவரும் வண்ணப் படங்கள்
கண்ணைப் பறிக்கும் வண்ண ஓவியங்கள்
கண்ணையுங் கருத்தையுங் கவர்ந்த
கண்மாயம் கண்கட்டு வித்தை
கண்முன்னால் நேரில் காண்பதுபோல (கல்கி)
கண்மண் தெரியாமல் ஓட்டுதல்
கண்மூடிக் கண்விழிப்பதற்குள் - மிகவிரைவில்
கண்மூடிப் பழக்கமெல்லாம் மண்மூடிப் போக
கணக்காகக் கச்சிதமாகப் பேசுதல் -
கணக்கு வழக்கில்லாமல் (—அளவின்றிச்) செலவழித்தல்
கத்தக் கதித்துக்கிடந்த பெருஞ்செல்வம் (கத்தக் கதித்து - நிரம்ப மிகுந்து) (திவ், பெரியாழ் 1-9-31)
கத்தனே நித்தனே சித்தனே சுத்தனே (குருதாச 1-19-3)
கத்திக் கதறிச் சொல்லல் ; அழுதல்
கத்தூரி சவ்வாது புனுகு பூசுதல்
கத்தியைத் தீட்டாதே புத்தியைத் தீட்டு
கதறி ஓலமிடல்
கதறிக் கண்ணீர் வடித்து நிற்றல் (மனுமுறை)
கதறியும் பதறியும் கூக்குரலிடுதல்

கதித்து ( - விரைந்து)க் குதித்துச் செல்லும் கால் நடைகள்

கதி மோட்சம் இல்லாத

கதிர்போல் இளைத்துக் குதிர்போல் பருத்தல்

கதிரவனுந் திங்களுமுள்ள காலமெல்லாம்

கதையுங் கற்பனையுமாகச் சொல்லல்

கந்தரை கழிசடை - பயனற்றவை

கந்தல் கூளமாய் ( - கந்தர கோலமாய்)க் கிடத்தல்

கந்தலும் பொந்தலும் உடுத்தித் திரிதல்

கந்தினை அனைய திண்தோட் காளையர் (கச். ஆ. பு. 2-39)

கப்புங் கவருமாய்க் கிளைத்தமரம்

கப்புங் கிளையுமாகப் படர்தல்

கப்புச் சிப்பு கடையிலே உப்பு - பேசாதிருங்கள் (பே)

கப்புச்சிப்பென்றிருத்தல் - பேசாதிருத்தல்

கப்புச்சிப்பென்று வாய்திறவாமலிருத்தல்

கபட நாடக சூத்ர கண்ணன் (பாரத நாட)

கபடறியார் சூதறியார் கள்ளமொன்றுந் தாமறியார் (பஞ்ச வனவாசம்)

கபடு சூது இல்லாதவன், அறியாதவன்

கயல்விழியுங் குயில்மொழியும் உடையவள்

கர்ணபரம்பரைக் கட்டுக்கதை

கர்மம் பக்தி ஞானயோக நெறிகள்

கரடி புலி சிங்கம் வாழும் காடு

கரடு முரடானவழி - ஒழுங்கற்ற வழி

கரவு மறைவு இன்றிப் பேசுதல்

கரார் கண்டிதமாகச் சொல்லல்

கரிந்து தீய்ந்து போதல்

கரிய பெரிய காடு

கருகித் தீய்ந்து போதல்

கருத்தில் இருத்து

கருத்தினுங் கருதவரிய நுண்ணணியன் (சோணசைல 7)

கருத்தும் கவர்ச்சியும் உடைய சொற்பொழிவு

கருத்தூன்றிக் கவனித்துப் பார்த்தல்

கருணை பூத்தலர்ந்த கமலக்கண்ணன் (குமர 567)

கருந்தூள் செந்தூள் பறக்கச் செய்தல்

கரும்புஞ் சுரும்பும் அரும்பும் பொரும்படைக் காமர் வில்வேள் (குமர 555) [கரும்பு காமனுக்கு வில்; சுரும்பு, நாண்; அரும்பு - அம்பு]

கருவிகரணங்கள் - இந்திரியங்களும் மனமும்

கருவிலே திருவுடையார்

கருவினைத் தரும் இருவினைத் தொடர் (திருப்பு)

கரைகாணாத களிப்புக் கடலில் மூழ்குதல் (பிரதாப. அதி. 35)

கரைசிந்து திரைசிந்து நுரைசிந்து விரைசிந்து (வில்லி 33-2) (சிந்து - கடல்)

கரை துறை தெரியாத இருட்டு

கரைந்து உருகல்

கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும்

கல்ஆனாலும் கணவன் புல்ஆனாலும் புருடன் (பழ)

கல் இயல் வன்னெஞ்ச வஞ்சக் கண்ணிலாப் பாதகர் (இரட்ச 21-315)

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றிய (மொழி)

கல்பொரு திரங்கும் கதழ்வீழ் அருவி (குறுந் 134)

கல்மனமும் கரைந்துருக

கல்யாணம் காட்சிகளுக்கு நிறையச் செலவழித்துக் கடனாளியாதல்

கல்யாணம் கார்த்திகை செய்தல் (ரா. ஸ்ரீ. தேசிகன்)
கல்லடிக்கும் வில்லடிக்கும் கருணைபுரிந்த கருத்தன் (மனுமுறை)
கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேன் (திருவா 476)
கல்லாத புல்லறிவோர்
கல்லா வெளிற்றுப் புல்லறிவோர் (காசிகண் 86-34)
கல்லி அகழ்ந்து எடுத்தல்
கல்லினம் வல்லென்ற மனம்
கல்லுங் கரடுமான வழு
கல்லுங் கரம்புமாய்க் கிடக்கும் நிலம்
கல்லுங் கரையும்படி கதறல் (கல்கி)
கல்லும் புல்லும் கண்டுருகப் பெண்கனி நின்றுள் (கம்ப 1-மிதிலை 593)
கல்லும் மண்ணும் கலந்தடிக்கும் காற்று; கலந்து விற்றல்
கல்லும் முள்ளும் நிறைந்த கரடுமுரடான பாதை
கல்லும் முள்ளும் புல்லும் புதரும் மண்டிக் கிடக்கும் நிலம் (பிரதாப.)
கல்லெடுப்புக் கருமாந்தரம் (பே)
கல்லெறிகளையும் சொல்லெறிகளையும் தாங்கும்வன்மை
கல்லென்றும் முள்ளென்றும் பாராது காட்டுவழியில் நடந்து செல்லல்
கல்வி அறிவு ஒழுக்கங்களில் சிறந்தவர்
கல்வி கேள்விகளில் வல்ல (புலவர்)
கல்வீச்சும் கலாட்டாவும் எதற்கு?
கலகம் கூச்சல் குழப்பம் அடிதடி
கலகலப்பாயும் சுறுசுறுப்பாயுமிருத்தல்
கலகலப்பும் சலசலப்பும் நிலவும் இடம்

கலங்கிக் குழம்பிய மனம்
கலங்கிக் கையற்றிருத்தல் (குறிஞ்சிப். 24)
கலங்கிக் கையற்று அலமரல் ; புலம்புதல்
கலங்கிப் புரண்டழுது கதறல்
கலங்கி மலங்கி இருக்கும் நீர்
கலந்த அன்பாகிக் கசிந்து உள்ளுருகுதல் (திருவா 1-57)
கலந்து உறவாடிக் களித்தல்
கலவமயிலும் குயிலும் பயிலுங் கடல்போல் காவேரி (ச 67-5)
கலவரமும் கல்வீச்சும் ஏற்படுதல்
கலவரமும் குழப்பமும் விளைவித்தல்
கலித்துத் தழைக்கும் பயிர்
கலுக்குப் பிலுக்கு - ஆடம்பரம் (யாழ். அக)
கலை, சமயம், மொழி, பண்பாடுகளைக் காத்தல்
(ஆடை) கலைந்து குலைந்துவிடல்
கவலை நெஞ்சத்து அவலம் (தீர்த்தல்) (புறம் 174)
கவலையுங் கஷ்டமும் கொண்டிருத்தல்
கவலையோ கஷ்டமோ (அக்கறையோ) இல்லாதவன்
கழுக்கு மொழுக்கென்று இருத்தல் - பருத்துக் கொழுத்து இருத்தல்
கள்ளங்கவடு சூதுவாது தெரியாதவன்
கள்ளச் சந்தையில் கொள்ளை லாபமடிப்பவர்
கள்ளங்கபடு இல்லாத வெள்ளையுள்ளம்
கள்ளம் கரவு (கரவடம்) இல்லாதவர்
கள்ள மனம் துள்ளும்
கள்ளமார்க்கெட்டில் ( - சந்தையில்) கொள்ளைலாப மடிப்போர்

கள்ளமில்லா வெள்ளை யுள்ளம்
கள்ளுண்டு களித்துக் கூத்தாடல்
களங்கமளங்கமற்றுப் பேசல்
களப கஸ்தூரிகள் பூசிக்கொள்ளல்
களவுங் கையுமாய் அகப்படல்
களவும் கொலையும் புலையும் தவிர்
களவாணித் திருட்டுப் பயல் (கல்கி)
களிக்குங் கரடக் கடாக் களிறு (பாகவதபு 10-33-5)
களித்து மகிழ்தல்
களிப்புக் கடலில் மூழ்கித் திளைத்தல்
களிப்பும் கலகலப்பாயுமிருத்தல்
களைத்து இளைத்துப் போதல்
களைப்போடும் இளைப்போடும் வந்துள்ளாய்
கற்பனைச் சிறப்பும் கருத்தோவியமும் (கலந்தநூல்)
கற்பகம் நிகர்கொடைக் கன்னன் ( - கர்ணன்) (வில்லி 26–74)
கற்பிற் சிறந்த காரிகை
கற்புக் கடம்பூண்ட பொற்புடை நங்கை; பொற்றொடி நங்கை
கற்பும் பொற்பும் உடைய காரிகை
கற்று மனமெனக் கதறியும் பதறியும் நிற்றல் (திருவா 4-73)
கற்றும் கேட்டும் ஆராய்ந்து பயிலுதல்
கற்றோர்க்கும் மற்றோர்க்கும் கழிபேரின்பம் நல்கும்
கற்றோர்க்கும் மற்றோர்க்கும் புரியும் நடை
கற்றோர்க்கேயன்றி மற்றோர்க்கு விளங்காத கடுமையான நடை
கற்றோரும் மற்றோரும் பாராட்ட
கற்றோர் கண்டிதமாய்ப் பேசல் - கச்சிதமாகப் பேசல்

கறுத்துத் தழைத்து நெய்த்து நெறிந்து சுரிந்துநீண்டு சுருண்டு கடைகுழன்ற கூந்தல் (வீராசாமி)
கன்மனங் கரைந்திடக் கழலுறுதல் (இரட்ச 21-37)
கன்னங்கரிய மேனி
கன்னங் கருத்த இருட்டு (பாரதிதா. கவி. 1)
கன்னங் கறேல் என்றிருப்பவன்
கன்னங்கள் குழியப் புன்னகை செய்தல் (கல்கி)
கன்னல் அம்சுவை கனிந்த சொல் (கன்னல் - சர்க்கரை) (நைட 72)
கன்னல் பிழிந்துகலந்த கனிச்சாறு (பாரதிதா. கவி. 1)
கன்னலின் அமிழ்தின் கனிந்த மென்சொற்கள் (நைட 152)
கன்னலின் அமிழ்தின் கனிந்திடப் பாடிக் கண்மணி குளிர்ப்புற நடிப்பார் (கூர்மபு 39-14)
கன்னலும் அமுதுங் கைத்திடு மொழியார்
கன்னலும் தேனும் அமுதமும் மதுரக்கனியும் போற் கட்டுரை செய்தான் (பெ. தொகை 17-15)
கன்னாபின்னா வென்று பேசுதல் - பொருளின்றிக் குழறிப் பேசுதல்
கன்னியழியாமல் கற்புநிலையைக் காத்துக் கொள்ளல்
கன்றிக் கருகிய செடி, முகம்
கன்றிக் கறுத்தெழுந்து காய்தல் (நாலடி 315)
கன்று காலிகள் - கால் நடைகள்
கன்று பிரிந்துழிக் கறவையொப்பக் கரைந்து கலங்குதல் (கம்ப 2-4-13)
கன்னம் வைத்துக் கொண்டிருத்தல்
கனத்த மழையும் பலத்த புயலும்
கனதனவான்கள்
கனவிலும் நனவிலும் மறவாமலிருத்தல்

கனவை நனவாக்கல்
கனவோ நினைவோ என்று ஐயுறுதல்
கனிச்சுவையன்ன கவி (காசிகண் 100-59)
கனிந்து பழுத்த பழம்
கனியாத கல்நெஞ்சம் (குமர 541)
கனியினும் இனியமென் மழலைக் குழவி (காசிகண் 43-15)
கனிவு இல்லாத கல்நேர்நெஞ்சக் கசடன்
கஷ்ட நஷ்டங்களை அனுபவித்தல்; பொருட்படுத்தாதிருத்தல்
கஷ்ட நிஷ்டூரங்களைச் சகித்துக் கொள்ளல்
காக்கறை மூக்கறை - அசடன்
காக்கன் போக்கனாய்த் திரிதல் - சோம்பேறியாய்த் திரிதல்
காக்கனும் போக்கனும் ( - அயலும் வழிப்போக்கனும்) கொண்டுபோதல்
காக்கான் போக்கான் - ஊர்பேர் தெரியாதவன்
காச்சுப் பூச்சென்று கத்துதல்
காச்சுமூச்சென்று கத்துதல்
காசு பணத்தை எதிர்பாராது காரியம் செய்தல்
காட்டிலும் மேட்டிலும் கால்வலிக்கத் திரிதல்
காடு கரம்பு
காடு கரைகள்; காடு கழனிகள்; காடு தோட்டம்
காடு கெடுத்து நாடாக்கல்
காடு கொன்று நாடாக்கிக் குளந்தொட்டு வளம்பெருக்கல் (பட்டினப் 283)
காடுங் கரம்புமாயிருத்தல்
காடுஞ் செடியுமாய்க் கிடக்கும் நிலம்
காடுமலைகளை எல்லாம் கடந்து சென்று

காடு மேடாய் அலைந்து திரிதல்

காடு மேடெல்லாஞ் சுற்றித்திரிதல் ; சுற்றியலைதல்

காடுவெட்டிக் கரம்பு திரித்துப் பயிரிடல்

காண்போர் கண்களையும் கருத்தையும் கவரும் காட்சி

காணி கரைகளைப் பார்வையிடல்

காதகி கள்ளி !

காதல் கரைகடந்து பெருகுதல்

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்குதல் (தே)

காதலாவது கத்திரிக்காயாவது

காதலும் கலியாணமும்

காதறை கூதறை - ஒழுக்கங் கெட்டவன்(ள்)

காதிலே கழுத்திலே ஒன்றும் இல்லாதவள்

காதுகொடுத்து உற்றுக் கேட்டல்

காமங்கலைந்து கன்றுதல் (சிந் 9)

காம வெகுளி மயக்கங்களைக் கடிதல்

காமனைப்போல் கட்டழகுடையவன்

காமா சோமா ( - கன்னாபின்னா) என்று கத்திக்கொண்டிருத்தல்; பேசுதல்

காய்த்துப் பழுத்துக் கனிந்த கனி

காய்தல் உவத்தல் இன்றி ஆய்தல் (அறநெறிச் 42)

காய்ந்து கருகிப்போன பயிர்கள் ; உலர்ந்துபோன பயிர்கள்

காய்ந்து கருவாடாய்ப் போதல்

காய்ந்து தீய்ந்துபோன

கார்புரை கரிய கூந்தற் காரிகை

காரசாரமாகப் பேசுதல் ; விவாதித்தல்

காரசாரமாகவும் ஆவேசமாகவும் பேசல் (கல்கி)

காரசாரமான விவாதம்

காரண காரியம் கடந்த கடவுள்

காரமாயும் கடுப்பாயும் பேசுதல்

காரியம் செய்யாது வீரியம் பேசலாமா?

காரிருள் மேய்ந்து ஒளி விரிக்கும் கதிரோன் (கூர்மபு 30-94)

காருள்ளளவும் கடல்நீர் உள்ளளவும் (அண்ணு)

கால் தடுக்கி இடறி விழல்

காலங் கா(ர்)த்தாலே - அதிகாலையில்

காலத்திற்கேற்ற கோலம் பூணுதல்

காலத்திற் கொவ்வாத கருத்து

காலத்துக்குத் தக்க கோலம் கொள்ளுதல்

காலதேச வர்த்தமானங்களை அறிந்திருத்தல்

காலம் செய்யும் கோலம்

காலம் நேரம் பார்க்காமல்

காலம் மாறினுல் கருத்தும் மாறும்

காலமும் கணக்குங் கடந்த பழமை (யுடைய)

காலமும் கற்பனையுங் கடந்த கடவுள்

காலனும் அஞ்சும் கடுங்கண் மறவர்

காலனும் அஞ்சும் காய்சின மொய்ம்பினுர் (கம்ப 4-17-9)

காலையும் மாலையும் கடவுளைத் தொழு

காலோடி கையோடி - தொழிலற்றுத் திரிபவன்

காவளர்த்தும் குளந்தொட்டும் அறப்பணி செய்தல்

காற்ருய்ப் பறந்து கடுகியே வாரும் (பஞ்ச. வனவாசம் 1)

காற்றினும் கடுகிச் செல்லுதல்

காற்றும் மழையுங் கலந்தடிக்க

கானுன் கோனுன் என்று காதில் கடுக்கன் தொங்கிக் கொண்டிருத்தல்

கிஞ்சுவாய் அஞ்சுகம் (அஞ்சுகம் - அழகிய கிளி)

கிட்டமுட்ட வரவிடாதே
கிட்டாதாயின் வெட்டென மற (கொன்றை 16)
கிட்டாப் பொருளுக்குக் கொட்டாவி விடல்
கிட்டிமுட்டி வரும்போது (- காரியம் கைகூடி வரும் போது) இப்படிச் சொல்லாதே (கல்கி)
கிடுகிடாய்த்தல் - நடுநடுங்குதல்
கிடுகிடு என்று நடுங்குதல்
கிடைத்ததைச் சுருட்டும் கீழ்மைக்குணம் படைத்தவர்
கிண்டலாகவும் குத்தலாகவும் பேசுதல்
கிண்டிக் கிளறிப் பார்த்தல்; வெளிக் கொணரல்
கிண்டிக் கிளைத்துப் பார்த்தல்
கிரமமாயும் ஒழுங்காயும் செய்தல்
கிருமிகீடங்களிலும் கீழ்ப்பட்ட அசேதனன்(மனுமுறை)
கிழங்கட்டைகளுக்கும் சோறு போடுக
கிள்ளி நிமிண்டுதல்
கிள்ளுங் கிளியுமாய்க் கிடத்தல்
கிளறிக் கிண்டிப் பார்த்தல்
கிளைத்துத் தழைத்து வளர்தல்
கிறுகிறுத்தல் - மயக்கமாதல், தடுமாறுதல்
கீழும்மேலும் பார்த்தல்
கீறிக் கிறுக்கி எழுதுதல்
கீறிப் பிளந்து கிழித்தல்
குஞ்சு குழந்தைகளைக் கூட்டிக்கொண்டு போதல்
குஞ்சும் குழுவானுமாயிருக்கும் குடும்பம்
குட்டிச் சுவரில் முட்டிக்கொள்ளல்
குட்டையிலே ஊறிய மட்டை
குடங்கைக்கு அடங்கா நெடுங்கண் (குமர. 391)
குடித்தனம் செய்யாமல் தடித்தனமாய்த் திரிதல்
குடித்துக் களித்துக் கூத்தடித்தல், கூத்தாடுதல்

குடித்துக் கும்மாளமடித்தல்

குடித்துக் கூத்தாடித் தத்தாரியாய்த் திரிதல் (சந்திரிகா 41)

குடித்துக் கூத்தாடுதல்

குடித்துக் கெட்டுக் குட்டிச்சுவராய்ப் போதல் (கல்கி)

குடியும் குடித்தனமுமாக வாழ்தல்

குடியும் கூத்தும் மலிந்த நாடு

குண்டக்க மண்டக்கமாய்க் கட்டித் தூக்கிவரல் - சுருட்டிக் கட்டித் தூக்குதல்

குண்டல மண்டலமாய்ச் சுருண்டு வளைந்திருத்தல்

குண்டுக்கும் குண்டாந்தடிக்கும் பயப்படாத வீரர்கள்

குண்டுகுளம் (குண்டு - குழி)

குண்டுங் குழியுமான பாதை

குணங்களும் குறிகளுமிலாக் குணக்கடல் (திருவா 572)

குணங்குடியிருந்த சிந்தைக் குரிசில் (இரட்ச 21-120)

குணங்குற்றம் அறிந்து கொள்ளல்

குணங்குறிகளைக் கண்டுபிடித்தல்

குணங்குறி குலங்கொற்றங் கோத்திரம் ஒன்றுமில்லாதவன்

குணமெனும் குன்றேறி நின்றார் (குறள் 29)

குணமுங்குலமும் உடையார்

குணமும் மணமும் நிறைந்த பொடி

குத்தலும் குடைச்சலும் உடம்பில் தோன்றுதல்

குத்தும் கொலையும் நடந்த பிரதேசம்

குதப்பிக் குதட்டி மெல்லுதல்

குதலைக் கிளிமென்மொழி (குமர 46)

குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர் (சிலப்: 22-129)

குதலைத் தெள்ளமுதின் தேனிற்கொண்ட மென்பவளச் செவ்வாய் மதலை (பாகவத பு. 4-3-12)
குதலைமென்மொழி மதலை (விநாய பு 80-111)
குதலையந் தீஞ்சொற் புதல்வன் (சோணசைல 38)
குத்தலாகவும் கிண்டலாகவும் பேசுதல்
குத்தலும் குடைச்சலும் உடைய காது
குத்திக் குடைந்தெடுத்தல்
குத்திக் கொழித்து அரிசியாக்குதல்
குத்துப்பழி வெட்டுப்பழி (-பெருஞ்சண்டை)யாயிருத்தல்
குத்தும் கொலையுமாயிருந்தது
குதித்துக் கும்மாளமிட்டபடி வருதல்
குதூகலத்துக்கும் கோலாகலத்துக்கும் பெயர்போன இடம் (கல்கி)
குதூகலத்துடனும் கோலாகலத்துடனும் (விழாக்) கொண்டாடுதல்
குதூகலமாயும் கோலாகலமாயும் வாழ்க்கை நடத்துதல்
குதூகலித்து அகமகிழ்தல்
குப்பைகூளங்களைக் கூட்டிக் குவித்து வைத்தல்
கும்பக்குழிய அளத்தல்
கும்பிக் கொதித்து நிற்றல்
கும்பிட்டுக் கூத்தாடி வாங்குதல்
கும்பிட்டு வணங்குதல்
கும்மாளமுங் கூத்தும் அடித்தல்
கும்மி கோலாட்டம்
குமரிமுதல் இமயம் வரை
குமுறலும் கொந்தளிப்பும்
குமுறி ஆர்ப்பரிக்கும் நெஞ்சம்
குமைத்துக் குமட்டிக்கொண்டு வாயாலெடுக்க வருதல்,

குய்யோ முறையோவென்று கத்துதல்; கூச்சலிடுதல்
குய்யோ முறையோவென்று கூவிப் புலம்புதல் (பஞ்ச வனவாசம் 2)
குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக் குழியில் விழுதல்
குருதிகொழித் திழிந்து குமிழ்த்து எறிய (பெரியாழ்)
குலங் கோத்திரம் பேசல்
குலத்திற்குன்றாக் கொழுங்கொடிச் செல்வர் (சிலப்)
குலந்தவங் கல்வி குடிமை (நாலடி 333)
குலம் கோத்திரம் விசாரித்தல்
குலமும் குடியும் தழைத்து வளரப் பாடுபடல்
குலமும் குடியும் நல்லவர்
குலமும் குணமும் ஒத்த காதலர்
குலமும் குணமும் நலமும் உடையார்
குலமும் குணமும் பொருந்தியவர்
குலுக்கி உலுக்கு
குலுக்கி மினுக்கித் தளுக்கி நடப்பவள்
குலைகுலைந்து நடுநடுங்கல்
குழந்தை குட்டிகளின் கும்மாளம்
குழப்பமும் கலகமும் விளைவித்தல்
குழப்பமும் கலவரமும் விளைத்தல்
குழப்பமும் குளறுபறுபடியும் இல்லாமல்
குழப்பமும் கொந்தளிப்பும் நிலவுதல்
குழலினும் கனிந்த அம்தீங்குதலை (நைட 944)
குழலும் யாழும் அமிழ்துங் குழைத்த மழலைக்கிளவி (சிலப் 2-59)
குழலை யாழினை அமுதினைக் குழைத்தன குதலை மழலை (சிவராத் பு 5-58)
குழிந்தாழ்ந்த கண் (நாலடி 49)
குழைந்து இழைந்து பேசுதல்

குழைந்து உருகி நைந்து வருந்துதல் (சிந் 1406)
குழைந்து நயமாகப் பேசுதல் (கல்கி)
குழைவும் நெளிவும்
குளம் குட்டையில் விழுந்து உயிர்விடுதல்
குளறித் தடுமாறிப் பேசுதல்
குளித்து முழுகி வருதல்
குளிர்ந்து சில்விட்டுப் போதல்
குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
குற்றங் குறைகளைப் பாராட்டாதிருத்தல்
குற்றங் குறைபாடுகளைப் பொருட்படுத்தாதிருத்தல்
குற்றஞ் செய்தாலும் குணமாகக் கொள்கின்ற குணக் குன்று (மனுமுறை)
குற்ற நற்றங்களைக் கூறுதல் (திவ் 378)
குற்ற நற்றம் பார்க்கக்கூடாது
குற்றம் பொறுத்துக் குறைநீக்கி யருள்க!
குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும்
குற்றுயிரும் குலை உயிருமாகக் கிடத்தல் (கல்கி)
குறுக்கி நெருக்கிச் சுருக்குதல்
குறுக்கும் நெடுக்கும் நடந்துகொண்டிருத்தல்
குறுக்கும் மறுக்கும் நடத்தல்
குறுகிச் சிறுகி அழிதல்
குறுகிச் சிறுத்துப் போயிருத்தல்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும் மயக்குறு மக்கள்
குறும்பு சேட்டை செய்தல்
குறும்பும் கேலியும் கிண்டலும்
(செலவைக்) குறைத்துச் சுருக்கிக்கொள்ளல்
குறைந்து மறைந்து போதல்
குறைநிறைகளைக் கண்டாராய்தல்

குறையை நிறைவு செய்தல்
குறையை முறையிடல்
குறைவாழ்வும் குற்றுயிருமாய்த் தவிக்கும் ஏழைகள்
குன்றுதும் குறையாதும் இருக்கும் செல்வம்
குன்றிக் குறைந்து அழிதல்
குன்றிற் பிறந்து தாது அளைந்து குளிர்தூங்கு அருவி தோய்ந்து வரும் தென்றல் (நைட 369)
குன்றுதுன்றின எனக் குமுறுகோப மதமா (கம்ப 3-1-10)
குன்று நெகிழ்ப்பன்ன குளிர்கொள் வாடை (அகம் 163)
குன்றென உயரிய குவவுத் தோளினன் (கம்ப 1-4-11)
கூகையின் குழறலும் ஆந்தையின் அலறலும் கேட்டார்க்கு அச்சம் விளைக்கும்
கூச்சலிட்டுக் குழப்பம் விளைவித்தல்
கூச்சலும் கும்மாளமும் போடுதல்
கூச்சலும் குழப்பமும் விளைவித்தல்
கூட்டநாட்டம் இப்போது நடப்பதில்லை
கூட்டமும் கும்பலும் (கூடாது)
கூட்டிக் குவித்துவைத்த குப்பை
கூட்டியும் குறைத்தும் புனைத்தும் திரித்து எழுதுதல்
கூடக்குத்தகையாக - மொத்தமாக
கூடக் குறைய இருந்தால் கூறு
கூடப் பிறந்த தங்கை
கூட மாட வேலைசெய்
கூடிஆடி விழாச் செய்து (பெரியாழ்)
கூடிக் கலந்து செயலாற்றுதல்
கூடிக் குதித்துக் கும்மாளமிடுதல்; மகிழ்தல்
கூடிக் குலவிக் கும்மாளமடித்தல் ; உறவாடுதல்
கூடிக் குலாவி மகிழ்தல்
கூடிப் பாடி ஆடி மகிழ்தல்

கூத்தடித்துக் கும்மாளம் போடுதல்
கூத்தும் கும்மாளமும் போடுதல்
கூம்பிச் சாம்பிக் குவிந்த பூ
கூரிய அறிவும் சீரிய ஒழுக்கமும் வாய்ந்தவர்
கூற்றங்கடிந்து சீற்றங் கொள்கின்ற கூற்றன் (அ. கந்தகோட்)
கூற்றம் தனக்கும் கூற்று அன்னான் (வில்லி 32-31)
கூற்றினுங் கொடிய வெய்யோன் (தேவாங்க 20-36)
கூன் குருடு செவிடு கிழடுகள்
கூன் குருடு செவிடு மொண்டி முடங்களுக்கு உதவுக
கூனிக் குறுகிக்கொண்டு உட்கார்ந்திருத்தல்
கூனிக் குறுகிக் கிடத்தல்; போதல்
கூனிக்குன்றி உருச்சிதைதல் (அப்பாத்)
கெஞ்சிக் கூத்தாடி வாங்கிக் கொள்ளல்
கெஞ்சிக் கதறிக் கேட்டல்
கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுதல்
கெஞ்சியும் கொஞ்சியும் கேட்டல்
கெஞ்சினால் மிஞ்சுவார், மிஞ்சினால் கெஞ்சுவார்
கெட்டி மேளம் கொட்டி முழக்கல்
கெட்டுக் குட்டிச் சுவராகிவிடல்
கேட்டை மூட்டை செவ்வாய்க்கிழமை எல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்திருத்தல்
கேட்பார் பேச்சைக் கேட்டுக் கெட்டுப்போதல்
கேட்பாரற்றுக் கவனிப்பாரற்றுக் கிடத்தல்
கேட்பாரும் மேய்ப்பாருமின்றித் திரிதல்
கேடும் பெருக்கமும் இல்லல்ல (குறள் 115)
கேலியும் கிண்டலும் செய்தல்
கேள்வி கேட்பாடு இல்லாத ஊர்
கேள்வி முறை இல்லாமல்

கேளும் கிளையும் கெட்டோர்க்கில்லை (நற்றிணை 4)
கேவிக்கேவி அழுதல்
கைகட்டி வாய்புதைத்து நிற்றல்
கைகட்டி வாய்பொத்தி நிற்றல்
கைகூப்பிக் கும்பிடல்
கைச்சுத்தமும் வாய்ச்சுத்தமும் உடையவன் - திருடாதவன், பொய் பேசாதவன்
கைதூக்கிக் கரை சேர்த்தல் (கல்கி)
கைநீட்டி ஏந்துதல்
கைப்பொருள் வெளவுங் களவேர் வாழ்க்கை (பெரும்பாண் 40)
கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்பு (முருகாற் 17)
கையில் ஒருகாசுமில்லை கடன் கொடுப்பார் ஆருமில்லை
கையுங் களவுமாகத் திருடனைப் பிடித்தல்
கையுங் காலும் சும்மாயிராதவன்
கையும் மெய்யுமாகப் பிடித்தல்
கையெழுத்துக் கால்எழுத்து இல்லாத கடிதம் (கல்கி)
கொக்கு குருவியெல்லாம் போய்விட்ட குளம்
கொங்கு விம்முறு குவிமுகை முல்லை (பாகவத பு 10-9-12)
கொஞ்ச நஞ்சமல்ல
கொஞ்சிக் குதூகலித்தல்
கொஞ்சிக் குலாவிப் பேசுதல்; மகிழ்தல்; இன்புறல்; குதூகலித்தல் (வைண 2-3)
கொஞ்சிக் குழைந்து பேசுதல்
கொஞ்சிக் கெஞ்சி வஞ்சஞ் செய்யும் பொதுமாதர்
கொஞ்சுமொழிக் கிஞ்சுகவாய் அஞ்சுகம் (அருண தோத். ம. 69)
கொட்டி முழக்கி விழாக்கொண்டாடல்
கொட்டு குழல் இல்லாமல் சடங்கு நடத்துதல்

கொட்டும் மழையையும் வெட்டும் குளிரையும் பொருட்படுத்தாமல்

கொட்டு முழக்குடன் திருமணம் நடத்துதல்

கொடுக்கல், வாங்கல் சம்பந்தம் வைத்துக்கொள்ளல்

கொடு கொடென்று குளிரால் நடுநடுங்குதல்

கொடுத்த கட்டளையைக் குறைவற நிறைவேற்றல்

கொடுப்போரும் அடுப்போரும் இன்றித் தாமே எதிர்ப்பட்டு மணம் செய்துகொள்ளல்

கொடைக் கடன்பூண்ட தாழிருந்தடக்கைக் கொற்றவன் (காசிகண் 43-23)

கொடைக்கடனமர்ந்த கோடா நெஞ்சினன் (பதிற் 20)

கொண்டல் சேர் கோபுரம்

கொண்டான் கொடுத்தான் இடத்தில் வெகுநாள் தங்காதே

கொண்டு கொடுத்து வாழ்

கொத்தடிமை குடியடிமை

கொத்தடிமை குலவடிமையாய் வாழ்தல்

கொத்திக் குதறிவைத்த காய்

கொத்தும் குறையுமாய்க் கிடத்தல் - அரைகுறையாய்க் கிடத்தல்

கொத்தோடே குலையோடே கொண்டு போதல்

கொப்பும் குழையுமாய்த் தழைத்த மரம்

கொல்லு கொலைக் கஞ்சாத கொடும்பாவி

கொலை கொள்ளை செய்யும் கொடியோர்

கொலை கொள்ளை திருட்டு

கொலையும் களவும் புலையுந்தவிர்

கொலையும் கொள்ளையும் மலிந்த நாடு

கொவ்வைச் செவ்வாய் அமுதுகுமென்குதலைத் தீஞ்சொல் மகவு (பாகவதபு 10-34-2)

கொழுகொம்பில்லாக் கொடிபோல் மெலிதல்; குழைந்து போதல்
கொழுகொம்பு இல்லாத கொடிபோல் ஆதல்
கொழுகொழு மொழுமொழு என்று வளர்ந்தவன்(ள்)
கொழுத்தும் பருத்தும் போன உடல்
கொழுமையும் வளமும் கெழுமிய
கொள்கை கோட்பாடுகள் (அண்ணு)
கொள்கையோ குறிக்கோளோ இல்லாத(வன்)
கொள்வனை கொடுப்பனை அவர்களிடமில்லை
கொள்ளத்தக்கனவும் தள்ளத்தக்கனவும் உள்ளன
கொள்ளுவன கொண்டு தள்ளுவன தள்ளுக
கொற்றவெண் குடைஎனக் குளிர்வெண் திங்கள் (கம்ப (5-2-52)
கொன்று குவித்தல்
கோக்குமாக்குச் செய்தல் - புரட்டுச் செய்தல்
கோட்டை கொத்தளங்கள்
கோடையால் வற்றி மீண்டும் கொண்டலால் நிறைந்த தென்நீர் ஓடை (வில்லி 43-17)
கோணல் மாணல் - திருக்கு ; வளைவு
கோணு மாணு வென்று செய்தல் - கோணல்மாணலாக
கோதானம் பூதானம் முதலிய மாதானங்கள் செய்தல் (பிரதாப. அதி. 31)
கோபதாபம் கொள்ளாமல் இருத்தல்
கோபத்தையும் பொறுமையையும் கிளப்பிவிடல்
கோபமாகவும் அதட்டலாகவும் பேசுதல்
கோபமும் ஆத்திரமும் கொள்ளுதல்
கோபமும் கொதிப்பும் கொள்ளுதல்
கோபமும் வெறுப்பும் குமுறிக்கொண்டு வரல்
கோயில் குளம் கட்டிவைத்தல்

கோர பயங்கரத் தாண்டவம் (கல்கி)
கோள் குண்டுணி சொல்கிறவன்
சக்கல் மக்கலான - மக்கி மங்கிய
சக்கி முக்கிக்கல்
சக்தியும் செல்வாக்கும் உடையவர் (கல்கி)
சக்தியும் வலிமையும் தீவிரமும் ததும்பப் பேசுதல்; செயலாற்றுதல்
சகதியும் சேறுமாயிருக்குமிடம்
சகலமங்கல சம்பிரம ஆடம்பரங்களுடன் (மனுமுறை)
சங்கடமோ சலிப்போ இல்லாமல்
சங்காமல் சலிக்காமல் வேலை செய்தல்
சங்காமல் சலிக்காமல் பணிசெய்தல்
சங்கு சரிந்து இரிந்து ஒசிந்து அசைந்து இசைந்து சேரும் வெண்மணல் (சீ 136-2)
சஞ்சலமும் சலிப்பும் இல்லாமல்
சட்டங்கள் கற்றும் பட்டங்கள் பெற்றும் வாழும் வழக்கறிஞர்கள்
சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டுதல்
சட்டதிட்டங்களுக்கு உட்பட்டொழுகுதல்
சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்படல்
சட்டதிட்டங்களோ விதிமுறைகளோ இன்றி
சட்ட வட்டமாய்ச் சுற்றுதல் (குடும்பவிளக்கு)
சட்டிபானை கழுவுதல்
சட்டி முட்டிகள் - சட்டிபானைகள்
சடங்குகளும் சம்பிரதாயங்களும் எதற்கு ?
சடுதி மடுதியாய் (-விரைவாய்ச்) செய்தல் ; செல்லுதல்
சண்டியிலும் சண்டி சகசண்டி
சண்டு சருகுகளை அரித்தல்
சண்டாளப் பாதகன்; பாவி

சண்டை சச்சரவு இன்றிச் சமாதானமாய் வாழ்தல்
சண்டை சல்லியத்திற்குப் போகாதவன்
சண்டை சாடிக்குப் போகாதவன்
சண்டையில்லாது சமாதானத்தோடு வாழ்தல்
சண்டையும் சச்சரவுமாக இருந்தது
சத்திய நித்திய தத்துவன் - கடவுள்
சத்திரம் சாவடிகள் கட்டுதல்
சத்து சித்து ஆனந்தமயமான கடவுள்
சத்தோ சாரமோ இல்லாத
சதா சர்வகாலமும் - எப்பொழுதும்
சதா சர்வதா - எபபொழுதும்
சந்தடி சாக்கில் தப்பி ஓடிவிடல்
சந்தடியும் சனநடமாட்டமும் உள்ள தெரு
சந்தர்ப்பம் சமயம் அறியாமல் பேசுதல்
சந்தர்ப்பமும் சூழ்நிலையும் சரியில்லை
சந்தி சதுக்கங்கள்
சந்து பொந்துகளில் எல்லாம் அலைந்து திரிதல்
சப்புச் சவுக்கென்று வாழ்க்கை கழிந்துவிடுதல் (கல்கி)
சப்புச் சவுக்கென்றிருக்கும் வழுதுணங்காய் (கல்கி)
சப்புஞ்சவறும் வாங்கி வருதல் - கழிபட்ட பொருள்களை வாங்கி வரல்
சமய சந்தர்ப்ப சூழ்நிலைகளால்
சமய சாதி வேறுபாடுகளைப் பாராது
சமயம் சந்தர்ப்பம் அறியாமல் பேசுதல்; செய்தல்
சமயமும் சந்தர்ப்பமும் வாய்த்தல்
சரச சல்லாப உல்லாசம்
சரி சமானமானவர்
சரிநிகர் சமானமாய் வாழ்தல் (பாரதியார்)
சரியை கிரியை யோகம் ஞானம் (சைவசித்தாந்த நெறி)

சரியொப்பு இல்லாதவன்
சல்லடை போட்டுச் சலித்தல்
சலிப்பும் களைப்பும்
சலிப்பும் சங்கடமும் இல்லாமல் செய்தல்
சலிப்பும் வெறுப்பும் கொள்ளுதல்
சலிப்போ சங்கடமோ இல்லாமல்
சலிப்போ சஞ்சலமோ இல்லாத
சலிப்போ சோர்வோ இல்லாமல்
சவண்டு துவண்டு போன தோல்
சளித்துப் புளித்துப் போன மாவு
சளைத்துக் களைத்துப் போதல்
சழிவு நெளிவு - கோணல், மாணல்
சன்னபின்னமாய் வெட்டுதல்
சன்னபின்னல் - சிக்கல்; நெருங்கிய பின்னல்
சன்னை சயிக்கினை - சன்னை சாடை; சாடை மாடை
சாக்குப் போக்குச் சொல்லுதல்
சாக்கி பாக்கி இல்லாமல் கடன் தீர்த்தல்
சாகப் பிழைக்கக் கிடத்தல்
சாங்கோபாங்கமாக யோசனை செய்தல் (கல்கி)
சாங்கோபாங்கமாகவும் ரசமாகவும் எழுதுதல் (கல்கி)
சாங்கோபாங்கமாய்ச் சொல்லுதல் - முழுமையாக விரித்துச் சொல்லல்
சாடை மாடையாய்ப் பேசுதல்
சாதக பாதகங்களை ஆராய்தல் - நன்மை தீமைகளை ஆராய்தல்
சாதிகுலஞ் சமயமெனுஞ் சுழிப்பட்டுத் தடுமாறல்
சாதிகுலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறல் (திருவா)
சாதி சமயச் சழக்குகளில் உழலாதவர்

சாதி சமய மதபேதம் (தவிர்த்த)
சாதி சமய வேறுபாடுகளை அகற்றல்
சாதித்து நிலை நாட்டுதல்
சாது சன்னியாசிகள்
சாதுரியமாயும் மாதுரியமாயும் பேசுதல்
சாதுரியமும் மாதுரியமும் விளங்கப் பண்ணிசைத்தல்
சாந்தமும் அமைதியும் ததும்பும் முகம்
சாந்தியும் சந்தோஷமும் சதா நிறைந்த மனம் (வை. மு. கோ.)
சாந்தியும் சமரசமும்
சாப்பாட்டிற்கு கூப்பாடு போடுகின்ற மக்கள்
சாமர்த்தியமாயும் சாதுரியமாயும் கூறல் (வை. மு. கோ.)
சாய்ந்து சரிந்து கிடக்கும் சுவர்
சாய்வு சரிவு இல்லாத சமதளம்
சாயல் மாயலாய்ப் பேசுதல் - சாடை மாடையாய்ப் பேசுதல்
சாயலாய் மாயலாய் வேலை செய்து வைத்தல்
சாரம் சப்பு இல்லாத - உப்புச் சப்பு இல்லாத (பேச்சு)
சால்புஞ் செம்மையுஞ் சான்றவர் (நற் 196)
சால மாலமாய்ப் பேசுதல் - வஞ்சகமாகப் பேசுதல்
சாவகாசமாயும் சாங்கோபாங்கமாகவும் நடந்த பொதுக் கூட்டம் (கல்கி)
சாவடி சத்திரங்கள்
சாறற்ற சக்கை (பாரதிதா)
சாஸ்திரம் சம்பிரதாயம் பார்க்காத
சிக்கடி முக்கடியாய்க் கிடக்கும் நூல்
சிக்கல்களையும் சிரமங்களையும் நன்குணர்ந்தவர்
சிக்கல் பிக்கல் - தாறுமாறு, முட்டுப்பாடு

சிக்கலும் குழப்பமும் இல்லாத நிலை
சிக்கலும் நெருக்கடியும் ஏற்படல்
சிக்கனமாகச் செட்டாக வாழ்க்கை நடத்துதல்
சிக்கச் சீரழிதல்
சிக்கித் தவித்தல்
சிக்குஞ் சிரங்குமாய் உள்ள உடம்பு
சிக்குப் பிக்காயிருக்கும் நூல்கண்டு - சிக்கலா யிருக்கும் நூல்
சிக்கும் சிணுக்குமா யிருக்கும் (நூல்)
சிங்காரச் சீமான்கள் (அண்ணா)
சிட்டை சிரட்டைகளில் நீர் ஊற்றி வைத்திருத்தல்
சிடுக்குப் பிடுக்கு - சிடுசிடுப்பு
சிடுசிடுப்பாயும் கடுகடுப்பாயும் பேசுதல்
சித்தப் பிரமைகொண்ட பித்தர்கள் (கல்கி)
சித்தன் போக்கு சிவன் போக்கு என்று அலைதல்
சித்தரும் முத்தரும் பத்தரும் வழிபடும் சிவபிரான்
சித்தியும் முத்தியும் பெறுதல்
சித்திர விசித்திர வேலைப்பாடுகள்
சிதறிச் சின்னபின்னமாய்ப் போதல்
சிதைத்துச் சின்னபின்னமாக்கு
சிதைத்துச் சில்லபொல்ல மாக்குதல்
சிதைத்துச் சீர்குலையச் செய்
சிதைத்து நசித்துப் போகச் செய்தல்
சிதைந்து உருத்தெரியாமற் போதல் (கல்கி)
சிதைந்து ஒழிதல்
சிந்தனை பேச்சு செயல்களில் செம்மையானவர்
சிந்தனையோ கவலையோ மனத்தில் இல்லாதவர்
சிந்தாது சிதறாது உணவுண்ணல்

சிந்தாமல் சிதறாமல் சாப்பிடுதல்
சிந்திச் சிதறிய சோறு
சிந்தித்துச் சீர்தூக்கிப் பார்த்தல்
சிந்தித்துச் செயலாற்றுதல்
சிந்தித்துத் தேர்தல்
சிந்தித்து வந்திப்போம் இறைவனை
சிந்துமணி சிதறுமணிகளைப் பொறுக்கிக் கொள்ளல்
சிந்தைக்கும் செவிக்கும் இனிய பாசுரங்கள்
சிந்தை கலங்கித் திகைத்து அலமருதல் (நள வெ 331)
சிந்தைக்கினிய செவிக்கினிய சொற்பொழிவு
சிந்தை செயல் சொல் எல்லாம் ஒத்திருத்தல்
சிந்தை நைந்து உருகுதல்
சிந்தை நொந்து நைந்து வெம்புதல்
சிந்தை நொந்துருகும் அன்பர் பஞ்சபாசந்தனை நீக்கும் கந்தன் (குன்றக் 7)
சிந்தை மயங்கித்தியங்கல் (அருட்பா)
சிந்தை மெலிவுற நொந்து வருந்துதல் (வில்லி 4-39)
சிந்தையில் தெளிந்த கல்விச் செழுமதி அமைச்சர் (வில்லி 27-166)
சிந்தையிலும் சென்னியிலும் வைத்துப் போற்றுதல்
சிந்தையிற் சிவனடி மறவாத செம்மையினர்
சிந்தையும் மனமுஞ் செல்லா நிலைமைத்தாய வீடு (பரிமேலழகர்)
சிந்தையும் மொழியுஞ் செல்லா நிலைமைத்து வீடு
சிம்பல் சிலும்பல் - கந்தை
சிரக்கம்பம் கரக்கம்பஞ் செய்தல் - தலையசைத்துக் கை தட்டுதல்
சிரித்துப் பரிகசித்துக் கலாட்டா செய்தல்
சிரிப்பும் களிப்புமாக இருத்தல் (கல்கி)

சிரிப்பும் விளையாட்டுமாய் எப்போதும் இருப்பவர்
சில்லபொல்லமாகச் சிதறிப் போதல்
சில்லென்கிளவி மெல்லென மிழற்றல் (பெருங் 4-5-17)
சில்வகை எழுத்தில் பல்வகைப் பொருளைச் செறித்துக் கூறல்
சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவிற் சிற்றுயிர் (ஆனந்த 2-56)
சிவனடி மறவாத சிந்தையினர்
சிள்ளுசிள்ளென்றே சீறிவிழுதல் (நீதி. கும்மி. 15)
சிற்றுயிர்க்கு உற்ற துணைகல்வி (நீதிநெறி வி. 2)
சிற்றியல், சிறுமை, ஆற்றல், சிறுதொழில் மனிதர் (கம்ப 5-3-143)
சிறகடித்துப் பறந்து செல்லுதல்
சிறப்பாகவும் செம்மையாகவும் பணியாற்றுதல்
சிறப்பாகவும் சுமுகமாகவும் நடத்தி வைத்தல் (கல்கி)
சிறப்பினையுஞ் சீரினையும் செப்புதல்
சிறப்பும் சீரும் இன்றி (அகம் 369)
சிறப்புஞ் சீரும் உடைய சீரியோர்
சிறப்பும் சீலமும் உடைய சீரியோர்
சிறப்பும் செல்வமும்
சிறப்பும் செல்வமும் பெருமையும் உடையோர் (நறுந் தொகை 51)
சிறந்து பொலியும்
சிறியர் செய்பிழையைப் பெரியவர் பொறுக்க வேண்டும்
சிறுமை செய்யும் வறுமை
சிறுமைப் பட்டுச் சீரழிதல்
சிறுமைப் படுத்திச் சீரழிதல்
சின்னஞ்சிறு கண்கள்
சின்னஞ் சிறுசுகள் - குழந்தைகள்

சின்னது சிறியதையெல்லாம் கூட்டிக்கொண்டுபோதல்
சின்னப்பட்டுச் சீரழிதல்
சின்ன பின்னமாக்கல்
சின்ன பின்னமாகச் சிதைத்தல்
சின்னபின்னமாய்ச் சிதறிவிடுதல்; சிதறுண்டு கிடத்தல்
சினமும் சீற்றமும்
சின்ன பின்னமடைந்து சிதறி(ச் சேனை) ஓடுதல்
சின்னன் பின்னன் - சிறியதும் பெரியதும்
சின்றுட் பல்பிணிச் சிற்றறிவினர்
சின்று பின்னமாக்கிச் சீர்குலைத்தல் (சோமு. மன்மத்).
சின்று பின்னமாய்ச் சிதறல்
சீட்டு நாட்டுப் போட்டு வைத்திருத்தல்
சீத்துப் பூத்தென்று சீறும் பாம்பு; அழுதல்
சீதனம் சீராட்டு நிரம்பக் கிடைக்கப் பெற்றவள்
சீமான்களும் கோமான்களும் பூமான்களும்
சீயென்று பேயென்று நாயென்று பிறரைத் தீங்கு செய்யாதிரு (அருட்பா)
சீலந்தாங்கித் தானந் தலைநிற்றல் (மணி 30-78)
சீலமும் செல்வமும் உடையவர்
சீர்குலைத்துச் சின்றுபின்ன மாக்குதல் (ரகுநாதன்)
சீர்குலைந்து சின்ன பின்னமாய்ச் சிதைந்து கிடத்தல் (திரவிடத்தாய் 23)
சீர்கெட்டுச் சிதைந்த
சீர்கொழிக்கும் சீமை
சீர்செனத்திகள் செய்தல்
சீர்த்தியும் சிறப்பும்
சீர்தூக்கி ஆராய்தல்
சீர்பட்டுச் செம்மைப்பட்ட
சீர்படுத்திச் செவ்விதாக்கல்; செம்மையாக்கல்

சீர்மை சிறப்பொடு நீங்கும் (குறள் 195)
சீர்மையும் சிறப்பும் (குறள் 195)
சீராகவும் முறையாகவும் செய்தல்
சீராட்டித் தாலாட்டுதல் (கல்கி)
சீராட்டிப் பாராட்டிச் செல்லமாக வளர்த்தல்
சீரியர்களோடு ஓரியர் சேர்வாரோ ?
சீருஞ் செட்டுமாகக் குடித்தனம் நடத்துதல்; பிழைத்தல்
சீருஞ் செல்வமும் பேருஞ் சிறந்தவன்
சீரும் சீதனமும்
சீரும் செம்மையும் உடையோர்
சீரும் செல்வமும் (ச. 226-2)
சீரும் செனத்தியும் (கல்கி - அலை)
சீவார்ந்து ஈமொய்த்து அழுக்கொடு திரியுஞ் சிறுகுடில்-உடல் (திருவா 418)
சீவிச் சிக்கெடுத்துச் சடை பின்னுதல்
சீவிச் சிங்காரித்து வருபவள்
சீவிச் சிறுக்கெடுத்தல்
சீவிச் செதுக்கி (இழைத்த மரம்)
சீவிச் செருகி முடித்த கூந்தல்
சீவி முடித்துச் சிங்காரித்தல்
சீறிச் சினந்து விழுதல்; பேசுதல்
சீறிச் சினமொழி கூறி
சீறுமாறு - தாறுமாறு, மிகுதொந்தரவு
சீறுமாறாக நடத்தல் - தாறுமாறாக நடத்தல்
சீறுமாறாகவே தாறுமாறுகள் சொல்பவன்
சுக்கு நூறாக உடைதல்; வெடித்தல்
சுக்கு நூறாகக் கிழித்துப் போடல்

சுக துக்கங்களில் பங்கு கொள்வோர்
சுட்டிக் குறிப்பிடல்
சுட்டுப் பொசுக்குதல்
சுட்டு வீழ்த்தல்
சுட்டு எரித்துச் சாம்பராக்குதல் (கல்கி)
சுடர்விட்டெரிந்து சுவாலை பரப்பும் (விளக்கு)
சுடு சொல்லால் உள்ளத்தைச் சுடல்
சுடுதி மடுதியாய் - விரைவாய்
சுத்தமும் சுகாதாரமும்
சுதந்திரத்தையும் கௌரவத்தையும் இழந்து வாழ்தல் (கல்கி)
சுதந்திரமாய்ச் சுயேச்சையாய்த்திரி; இரு
சுயநலத்தையும் சுகபோகத்தையும் விரும்புதல்
சுயமாகவும் சொந்தமாகவும் செய்தல்
சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்
சுருங்கித் திரைந்த உடல்
சுவைக்கினிதாகிய குய்யுடை அடிசில் (புறம் 127)
சுவைத்து உருசி பார்த்தல்
சுவையும் பயனுமுடைய நூல்
சுவையும் மணமும் நிறைந்த பால்
சுழித்து நுரைத்துக் கொப்புளிக்கும் கடலலைகள்
சுள்ளி சுப்பல்களைப் பொறுக்கி எரித்தல்
(படுக்கையைச்) சுற்றிச் சுருட்டிக்கொண்டு போதல்
சுற்றிச் சுழற்றி யடித்தல்
சுற்றிச் சுற்றி அலைந்து திரியும்
சுற்றித் திரிதல்
சுற்றிவளைக்காமல் நேராய் உடைத்துச் சொல் (குசப்ரியை)
சுற்றுச் சூழ்நிலைகள்

சுற்றுஞ் சுழற்றுமாய்ச் செல்லும் வழி
சுற்றுமுற்றும் பார்த்தல் — நான்கு பக்கமும் பார்த்தல்
சுறுசுறுப்பும் துடிதுடிப்பும் உடைய
சுறுசுறுப்பும் விறுவிறுப்பும் உடைய வாழ்க்கை
சூட்சாதி சூட்சத்துல்லியன்
சூட்டோடு சூடாய் (-உடனுக்குடனே)ச் செய்தல்
சூடாறிக் குளிர்ந்து கிடத்தல்
சூடு சுரணை இல்லாதவன்
சூதும் வாதும் வேதனை செய்யும் (கொன்றை 31)
சூது வாது இல்லாத சாது (கல்கி)
சூது வாது கள்ளங் கபடு தெரியாதவன்
சூழ்நிலையும் சுற்றுச் சார்புகளும்
சூம்பிச் சாம்பிக் குன்றிப் போய் நிற்றல்
சூழ்ச்சி செய்து வீழ்ச்சி யடையச்செய்த
சூழ்ந்து சுற்றிக் கொள்ளுதல்
சூளிகை வகுத்த மாளிகை (குமர 582-9) (சூளிகை - மாடியிலுள்ள அறை)
செக்கச் சிவந்த (-மிகச் சிவந்த) கண்கள்
செக்கச் செவேலெனச் சிவத்தல்
செங்கதிர் எழுந்துசீறின் செறிஇருள் நிற்பதுண்டோ? (வில்லி 27-174)
செஞ்சடை வானவன் (சிலப் 26-98)
செஞ்சூட்டுச் செஞ்சேவல் (வைண 2-4)
செட்டாகவும் மட்டாகவும் செலவு செய்பவன்
செட்டுங் கட்டுமாய்க் குடித்தனஞ் செய்தல் (அம்மணி 39)
செட்டுஞ் சிக்கனமும் உடையவர்
செடி கொடிகள்
செடிகொடி புல்பூண்டுகள் முளைக்காத இடம்

